# உதவி மறுத்தல் கதைகள்.

திரு. வா. சுவாமிநாத சாஸ்திரி,

வைத்தியர்,

திருச்சிறுப்பள்ளி,

இயற்றியது.



# Non-Co-operation Stories.

(IN TAMIL)

BY

Dr. T. V. S. SHASTRI. L. M. S.

TRICHINOPOLY.

---

Saraswathi Printing Works.

Trichinopoly.

Price As. 12 only] 1926. [விலை அணா 12

DEDICATED TO

# Mrs. Susanna Joseph

OF MADURA,

as a mark of the Author's

esteem & regard.

---

ஆசிரியரின் நன்மதிப்பின் அடையாளமாக

மதுரை

## ஸூஸன்னு ஜோஸப் அம்மை

அவர்களுக்கு

சமர்பிக்கப்பட்டது.

# முகவுரை.

"உதவி மறுத்தல்" இயக்கம் உலகத்தையும் நம் நாட்டவரையும் புனிதமாக்கவந்த கிளர்ச்சிகளுள் ஒன்றாகி, அனைத்திலும் சிறந்ததாயுள்ளதென்பதை எவரும் மறுக்க முடியாது. அவ்வக்காலத்திற்கேற்ப உலகத்தில் வெவ்வேறு அநீதிகளை ஒழிக்கவும், ஓரொரு சத்தியத்தை நிலை நாட்டவும், தோன்றிய அவதார புருஷர்களுள் மகாத்மா காந்தியும் ஒருவரென்றே யாவரும் ஏற்றுக்கொள்வர். ஸ்ரீ புத்தரின் அஹிம்ஸையும், கர்த்தர் இயேசு நாதரின் தன்னல மறுப்பும், அரிச்சந்திரனின் சத்திய உறுதியும், சிபிச் சக்ரவர்த்தியின் கருணையும், ஸ்ரீ ராமபிரானின் வாக்குறுதியும், ஸ்ரீ கிருஷ்ண பகவானின் அநீதியை ஒழிக்கும் ஆற்றலும், நபிகள் நாயகம் மகமத் ரஸூல் அவர்களின் ஆண்மையும், விடா முயற்சியும், கவுண்ட் லியோடால்ஸ்டாய் அவர்களின் ஏழைகளுக்கிரங்கும் சிந்தையும் ஒருங்கே வாய்ந்து, அனைவர் உண்மைகளும் ஒன்றுகூடித் திரண்டு உருவெடுத்தாற்போல் தோன்றி, இவ்வுலகினின்றும் இரத்தம் சிந்தும் "போர்" எனும் கொடுமையை அறவேயொழிக்க "உதவி மறுத்தல்" இயக்கத்தை ஈன்ற மகான், மகாத்மா காந்தியடிகளன்றோ!

மனிதர்களுள் அநேகர் தங்கள் தங்கள் மனதிலுள்ள சுயநலம், வீண் அச்சம், அஸத்தியம் முதலிய தீமைகளை விலக்கவும், குடி, கொலை, பொய் மொழிதல் முதலிய பாதகங்களை நீக்கவும், இவ்வியக்கம் உதவியாய்

நின்றதென்பது எவரும் அறிந்த விஷயம். உதவி மறுத்தல் இயக்கத்தைப்பற்றி அபிப்பிராயங்கள் வேறு பட்டிருந்தபோதிலும், அதன் உண்மைகளை குறை கூறுவோர் அனேகர் இருக்க மாட்டார்கள். இந்த இயக்கத்தின் உபதேசங்களால் நான் அறிந்துகொண்ட நீதிகள் சிலவற்றை இந்தக் கதைகளின் மூலமாய் வெளியிடத்துணிந்தேன்.

இந்த இயக்கத்தில் ஈடுபட்டதின் நிமித்தம் அடியேன் ஒருவருடகாலம் சிறைவாசத்திலிருந்தபோது இயற்கையில் பெற்ற புத்தியைக்கொண்டும், இயக்கத்தால் கிடைத்த அனுபோகத்தைகொண்டும், அரசாங்கத்தார் அருளிய எழுது கருவிகளைக்கொண்டும் எழுதப்பட்ட இக்கட்டுக்கதைகள், முழுவதும் கட்டுக் கதைகளாயினும், சிற் சிலருடைய சொந்த அனுபவங்கள் இதில் கலந்திருப்பினும், ஒருவரையும் சுட்டிக் காட்ட இவை எழுதப்படவில்லை என உறுதி கூறுகிறேன்.

பதிவிரதா தர்மத்தை விளக்கிக்காட்ட நம் நாட்டிற் பிறந்த கற்பிற்சிறந்த மாதர்களுக்கு சமமான குணங்கள் வாய்ந்த அம்மணி ஸுஸன்னு ஜோஸப் (என் நண்பர், மதுரை பாரிஸ்டர் ஜோஸப் அவர்களின் மனைவி) அவர்களிடம் எனக்கிருக்கும் மரியாதையையும் நன்மதிப்பையும் காண்பிக்க ஓர் அடையாளமாக, இந்தப்புத்தகத்தை, அவ்வம்மையவர்களின் அனுமதியுடன் நான் அவர்களுக்கு சமர்ப்பிக்கிறேன்.

இச்சிறு கதைகள், அவைகளுள் அடங்கியிருக்கும் உண்மைகளையும், கொள்கைகளையும் வெளியிடும் உத்தேசத்துடன் எழுதப்பட்டவைகளே தவிர எனக்கு தமிழ் பாஷையிலிருக்கும் பாண்டித்தியத்தை வெளியிடும் நோக்கத்துடன் எழுதப்படவில்லையாதலால், அன்பர்கள் இதிலிருக்கும் சொற்பிழை முதலியவற்றை பாராட்டாதிருக்கும்படி வேண்டுகிறேன்.

காதல் ரசமின்றி எழுதப்படும் கதைகள் நற்சுவையுடனிருப்பது கடினமென சிலவிடங்களில் கருதப்படினும் என்னால் கூடியமட்டும் இக்கதைகளுள் அகஸியம், உருக்கம், நட்பு, ஈகை முதலிய ரசங்களை சேர்த்து தமிழர்களுக்கு இன்பமளிக்குமாறு முயற்சி எடுத்திருக்கிறேன். தமிழர்கள் ஆதரிக்கவும்.

15—9—26 } தங்கள் ஊழியன்
திருச்சி. } திரு. வா. சாமிநாத சாஸ்திரி.



# I

## குருடனுக்குக் கண் திறந்த விவரம்

---

இஃது குருடன், குருடனுக்கு வழிகாட்டியதின் விவரம். இதை வாசிப்பவர்களுள், அபரிமிதமான ராஜ விசுவாசம் பாராட்டும் சில வேஷதாரிகள், இதைக்கண்டவுடன் "குருடன் குருடனுக்கு வழிகாட்டுவதின் முடிவு எங்கன மிருக்குமென்பது எல்லோருமறிந்ததுதானே" என இப்பழமொழியைக் கூறி பரிகாஸிப்பார்களென்பது நமக்குத் தெரியாததன்று. ஆயினும் தேசபக்தி கொஞ்சமேனும் உள்ளத்தில் குடி கொண்டவர்களுக்கு, இச்சரித்திரத்தினின்றும் நல்லதோர் எண்ணம் உதிக்குமென்பதற்கையமில்லை. ஆனால் "கற்க கசடற கற்பவை கற்றபின் நிற்க வதற்குத்தக" எனும் குறளினிரண்டாம் வாக்கியத்தை நம்மவர் ஞாபகத்துக்குக் கொண்டுவருவார்களென்பதுதான் கொஞ்சம் சந்தேகம். எது எப்படி யிருந்தபோதிலும், ஆசிரியன் கடமை சரித்திரம் எழுதல். அதிலும் உண்மையாய் நடந்த விவரங்களைக் கூட்டிக் குறைக்காமலெழுதுவதில் யாதொரு பிசகுமில்லை. இதைவிட்டு, ஒவ்வொரு ஆசிரியனும், நம் சரித்திரங்களைப் பொது ஜனங்கள் எவ்வாறு ஏற்பார்களோவென்று தயங்குவது அசாத்தியம். படிப்பவரனைவருடைய மனங்களையும் பூரிக்கக்கூடிய நூல்

களேதான் எழுதப்படவேண்டுமென்றிருந்தால், காகிதத்தின் விலையும் இவ்வளவு ஏற்றமாயிராது. ஜனங்கள் மனம் பிரமிக்கும்படியாய் இவ்வளவு நூல் குவியல்களும் இப்பூமிக்குப் பாரமாய் விளங்கி நில்லா!

அகில இந்தியா காங்கிரஸ் மகாசபையானது, ஏதோ பொழுது போக்குவதற்காகச் சில பெரியமனிதர்கள் ஏற்படுத்திய கொண்டாட்ட மென்றிருமல், அசட்டையாயிருப்பினும், மனதில் அதிருப்தி நீங்காத சகல ஜனங்களின் ஆதரவையும் பெற்ற மகா சபையாய்விட்டது. ஏதோ வஸந்த உத்ஸவம்போல் தமாஷ் நடத்துங்காலம் போய், இப்பொழுது காரியத்தில் கண்ணும், அரும்பெருங்காரியங்களைக் குறித்து ஆழ்ந்து ஆலோசனை செய்யக்கூடிய நிலைமைக்கு மாறிவிட்டது. "ராமனுண்டாலென்ன ராவணனுண்டாலென்ன" என்றிருக்கும் நமது கோடானுகோடி ஜனங்களும் ராஜீய விஷயங்களையும், தேசீய மகா சபையின் நடவடிக்கைகளையும் கவனிக்கலாயினர். காங்கிரஸ் மகாசபையும், பெரிய சர்க்கார் உத்தியோகங்களுக்கு ஏறிக்குதிப்பதற்கு வசதியாயிருக்கும் ஒரு ஏணிமரம்போல் நில்லாது சதா அரைப்பட்டினியாய் ஆடுமாடுகள்போல் நிலைமை குன்றித்தாழ்ந்த வாழ்க்கையில் உழலும் நம் ஏழைஜனசங்கையின் குறைகளையும் அவற்றை நிவர்த்திக்கும் முறைகளையும் நாடலாயிற்று. மேலும், தலைமுறை தலைமுறையாய் பகையாளிகளென சொல்லப்படும் ஜாதியஸ்தர்களும், மதஸ்தர்களும் ஒருவரையும் விடாது விழுங்க முயன்று

கொண்டிருக்கும் அன்னிய பகாசுரனுடைய சூழ்ச்சி களினின்றுந் தப்பிக்கும் பொருட்டு ஒருமனப்பட்டு, ஒன்றுகூடி சகோதர பாவங்கொண்டாடி நின்றனர்.

மூன்றுநாள் கொண்டாட்டம் போய், வருஷம் முழுதும நாள்தவறாமல் காங்கிரஸ் காரியம் பார்க்கும் உணர்ச்சி உண்டாயிற்று. அன்னிய அதிகாரிகளிடம் பல்லைக்காட்டிக்கெஞ்சுவதையும், மண்டிபோட்டிரப்ப தையும் விட்டு, ஆத்ம சுத்தியிலும் ஒரு மனப்படுவதி லும் முயற்சிசெய்யத் துடங்கலாயிற்று. பிச்சைக் குரல் போய் உரிமையுடையோர் தொனி வந்தது. வாய்ச்சாலக்கிற்கும், ஆகாசப்பந்தல் போடுவோருக்கு மிருந்த மதிப்பு, உண்மையா யுழைப்போர்க்கும், தியாகசிந்தனையுள்ளோர்க்கும் கிட்டிற்று. நெடுநாள் தூக்கத்தினின்றும் விழித்த ஜனங்களின் புதிய உணர்ச்சி, கும்பகர்ணனுடைய பசியைப்போல், ஆரா ததாயிருந்ததின் நிமித்தம், நாடெங்கும் புதிது புதி தாய் தேச ஊழியர்கள் முன்வந்து ஜனங்களுக்குத் தேசிய ஞானம் ஊட்டப் புறப்பட்டார்கள்.

தஞ்சை ஜில்லாவைச் சேர்ந்த சிறு பட்டிணமா கிய மாங்குகலமெனுமிடத்திலும், பழைய அசட்டை யொழிந்து புதிய உணர்ச்சி பிறந்தது. அவ்விடத்தி லும் சில தேச பக்தர்கள் முன் வந்தனர். அவ்வூரில் ஏற்பட்ட உணர்ச்சியினின்று உதித்த பலன்களெல்லா வற்றிலும் முக்கியமான பலன் யாதெனில், அந்தகர வாசி ஹாஜீ அப்துல்கரீம் சாஹிப் அவர்களின், கண்

திறந்ததே. "கண்" என்றால் மனக்கண். ஏனெனில் ஹாஜியார் பிறவிக்குருடன். நேத்திர மில்லாவிடினும் ஹாஜியார் நல்ல பண்டிதர். பூர்விகச் சொத்து போது மானதிருந்தபோதிலும் ஒருதொழிலை நடத்திவந்தார். இஸ்லாம் மார்க்கத்திய விஷயங்களைக்குறித்துத் தன் பையன்களை உறக்கப் படிக்கச் சொல்லிக் கேட்டுக் கொண்டிருப்பதே யவர் வழக்கமாயிருந்தது. ஊரில் உண்டான புதிய தேசிய உணர்ச்சி, அவர் காதில் விழவே, தினசரிப் பத்திரிகைகளை வரவழைத்து நாள் தவறாமல் படிக்கச் சொல்லிவந்தார். "கண்ணிழந்த நான், மற்றைய புலன்களின் பலன்களை நன்றாயனுப விக்கவேண்டும்" என்று சொல்லிக்கொண்டு மதவிஷய மானதோ, தேசிய சம்மந்தமானதோ, ஒழுக்கமுறை யைப்பொறுத்ததோ எவ்விதமான பிரசங்கங்களுக்கும் தவறாது போய்வருவார். தேசபக்த சிகாமணிகள் வரதராஜலு நாயுடு, கலியாணசுந்திர முதலியார், டாக்டர் ராஜன், முதலியோருடைய சொல்வன்மை பொருள்வன்மை பொருந்திய உபன்யாஸங்களைக் கேட்கக் கேட்க, அவர்களைப்போல் தானுங் கேட் போர் மனமுருகும்படியாகப் பேசுஞ்சக்தியைப்பெற வேண்டுமென அவாக்கொண்டார். தான் ஜனங்கள் முன்னின்று பேசிப்பார்க்கலாமென்றால், வெகுநாள் வரையில் சந்தர்ப்பம் நேரிடவில்லை.

கடைசியாக ஒருநாள், நம்பாழுந் தமிழ்நாட்டில் அடிக்கடி நேரிடுவதுபோல், ஒரு கூட்டத்திற்குத் தகுந்த அக்கிராசனர் அகப்படாமலிருந்தது. அப்

பொழுது அக்கூட்டத்திலிருந்த ஒருவர், ஹாஜியார்
கலந்த கூட்டங்களுக்கு வருவதைக் கவனித்திருந்த
வர், அவரையே அக்கிராஸனம் வகிக்க வேண்டினார்.
அன்று அவர் செய்த உபந்யாசத்தின் வாக்குச்சாதுர்
யத்தையும் விஷய விளக்கத்தையும் தெய்வபக்தியை
யுங் கேட்டோர் யாவரும் இவர் வரப்பிரஸாதம் பெற்
றவர் எனக்கொண்டாடி அவர் பெயரை நிலைக்கச்
செய்தனர். அன்றுமுதல் தமிழ் நாட்டில் தற்போது
எந்த ஊரிலேயும் எல்லோராலும் நன்கு மதிக்கப்
பெற்றுவரும் ஹாஜியார் இல்லாமல் எங்கும் ஒரு
பொதுக்கூட்டமும் நடைபெறுகிறதில்லை.

காலக்கிரமத்தில், ஹிந்து, மகமதிய, கிறிஸ்துவ
சகோதரரனைவரும், திரள்திரளாய், தலைமுறை தலை
முறையாய் ஒற்றுமையுடன் சகோதரர்போல் வாழ்ந்
துவரும், திருச்சிமாநகரமென்னும் பூர்வீக க்ஷேத்தி
ரத்திற்கு ஹாஜியார் விஜயஞ்செய்து, அந்த மூன்று
நாள் சேர்ந்தாற்போல் உபந்நியாஸம் செய்வதாய்
விளம்பரம் பிரசுரமாயிற்று. அச்சமயம் நடந்த விந்
தையைக்கூறுகிறேன். அஃது கட்டுக்கதை யென
எண்ணவேண்டாம். பிரபஞ்சத்தில் இதுபோன்ற சம்
பவங்கள் நடப்பது அரிதல்ல, அநேகம் பார்க்கலாம்.

திருச்சியில் இரண்டு கண்ணுமிழந்த பிச்சைக்
காரனொருவனிருந்தான். அந்த நகரத்தில் அவனைத்
தெரியாதவர்களில்லை. அவனைப்பார்த்திராதவர்களும்
அவன் பெண்ணின் இனியகுரலைக் கேட்டிராதவர்
களும் வெகுசிலரே. சுமார் பத்துப் பனிரண்டு வய

துள்ள அப்பெண் குழந்தை, தான் பிறக்கும் பொழுதே தன் அன்னையையிழந்த, தாயில்லாச்சேய்.

நகரவாசிகள் பலர் அவள் நிலைமையைக் கண்டு பரிதவித்தோ, அல்லது அச்சிறுமியின் குயில் போன்ற குரலின் தெய்வீக இசையைக்கேட்டு மகிழ்ந்தோ, தங்கள் சில்லறைகளை அனேகவிசை அவர்களுக்கீந் திருப்பினும், அப்பிச்சைக்காரனுடைய சரித்திரத்தை அறிந்தவர்கள் அனேகரில்லை. ஒருநாள் மத்தியானம் அவர்களுக்கன்னமிட்டு பெண்ணுக்குத்தெரிந்த பாட்டுகளனைத்தையும் கேட்டானந்தித்தபின், பொழுது போக்கிற்காக, தன் வரலாற்றைச் சொல்லும்படி வற்புறுத்தினேன். அவனது வணக்க ஒழுக்கமும், கடுஞ்சொற்களை பொறுமையோடு ஏற்கும் சாந்த சுபாவமும், அவனுக்குப் பிறவிமுதல் வாய்ந்த குணங்களென அன்றே உணர்ந்தேன். அன்றுமுதல் அவனிடம் ஒருமரியாதையும் எனக்கு ஏற்பட்டது. அவன் பெண்ணோ, விசாலமான கண்களையுடைய வனதேவதையைப் போன்ற சிறுமி. அவள் ஒரு குரலைப் போன்ற இனிய குரல், நான் வேறெங்கும் கேட்டதில்லை. அவளுக்குத் தகுந்த சிக்ஷையும் சொல்லிவைத்து, வித்தைக்கேற்ற வண்ணம் ஆதரிக்கக்கூடிய சக்திவாய்ந்தோர் நிரப்பிய எத்தேசத்திலும் அவளிருப்பின். இவ்வுலகமுழுதும் மெச்சி மகிழும்படியான சங்கீத வித்வானென, அவள் பிரகாசிப்பதற்குத் தடையில்லை. ஆனால் அத்துர்பாக்கியவதியோ, ஏழைப் பட்ட நம் நாட்டில், அதிலும் ஓர் குருட்டுப் பிச்சைக்

காரன் வயிற்றில்வந்து உதித்தாள். என்செய்வாள்! அவள் தேவகானத்தால் அவர்களுக்குக் கிடைத்தது சில்லறைக்காசுகளும் எப்போதாவது வயிறு நிறம் பச்சோறுமே! அந்தப்பெண்ணின் புத்திக் கூர்மையும் உற்சாக வியல்பும் தகப்பனிடத்துள்ள வாஞ்சையும் என்மனதைக்கவர்ந்தது. அந்தத்தகப்பனுடையபொறுமையும், கௌரவமும், உண்மைப் பெருந்தன்மையும் அவனிடம் எனக்கு ஜனித்த மரியாதையைக் காப்பாற்றிவந்தன. ஆகையால், அவ்விருவரும் என்வீட்டில் அடிக்கடி விருந்தாளிகளாயினரென்பது அதிசயமல்லவே! நாளடைவில் என்வீட்டுத்திண்ணையே அவ்விருவருக்கும் படுக்கைஸ்தலமாயிற்று. குளிரும் மழையும் அதிகமான நாட்களில் நான் எவ்வளவு வேண்டியபோதிலும், உள்ளேவந்து படுக்கச்சம்மதிப்பதில்லை. "இந்த இடம் என்றைக்கும் நிலைத்தாற்போதும். சுவாமி! கடவுள் கிருபையிருந்தால், கூடியசீக்கிரத்தில் இந்தக்குழந்தைக்கென்று ஏற்படும் குடிசையில் நானும் குளிரடக்கமாய் ஒண்டிக்கொள்ளுகிறேன். அதுவரையில் இதுபோதும்" என, தன்பெண்ணின் தலையில் கையைவைத்து, அவளை அணைப்பான். அந்தக்குழந்தையும், கோழிக்குஞ்சுபோல் அவனிடம் ஒண்டிக் கொள்ளும்.

ராட்டின [illegible] மகிமையை மகாத்மா காந்தி நாடெங்கும் பரவச்செய்தபோது, என்வீட்டிலேயும் சதா ராட்டினத்தின் ரீங்காரம் நிரம்பி விளங்கிற்று. இப்புதிய (பழைய) கருவியைக்கண்டு வியந்த

அச்சிறுமிக்கு, நூல்நூற்கும் வித்தையைக்காண்பிப்
பதில், எறக்குறைய அதே வயதுள்ள என்பெண்
ணுக்கிருந்த பெருமையும் உற்சாகமும் இவ்வளவு
அவ்வளவு இல்லை. இவ்விரு சிறுமிகளும் ஒருசாண்
நூலில் பதினெட்டுவித நம்பராய் விளங்கும் நூல்
இழுப்பதில் வெகுதீவிரமாய் முனைந்து, இருதிண்ணை
களிலும் உட்கார்ந்திருப்பதைப் பார்ப்பது கண்குளிர
விருந்தது. வீணாக்கிய நல்லபஞ்சுக்கொட்டைகள்
கணக்கு வழக்கில்லை. எப்போதாவது முழுவதாய்
ஒருமுழநூல் யாராவது இழுத்துவிட்டால் உடனே
அதை எல்லோரிடத்துங் காண்பித்து "இது என்ன
நம்பர் இருக்கும்" எனக்கேட்பவர்க்கு, அரைமுதல்
நூறுவது நம்பர்வரை வெவ்வேறு இடங்களில் காண்
பிக்கும் அந்த நூலுக்கு நம்பர் நிர்ணயிக்க யாருக்கு
சாத்தியம்! இவ்விருகுழந்தைகளும் பெருமை பேசிக்
கொள்வதைக் கேட்டால், இன்னும் கொஞ்ச
நாளில், இவர்களுக்கு இன்னும் கொஞ்சம் கைபழ
கியவுடன், சீமையிலிருக்கும் லங்காஷையர் மில்காரர்
கள் பிழைப்பே குலைந்துவிடுமென நினைக்கும்படி இரு
க்கும் "சுவாமீ! இதென்ன இந்தக்குழந்தைகள்பேசிக்
கொண்டிருப்பது! இங்கே ராட்டினம் சுற்றுகிறதாம்,
சீமையில் இருக்கும் ஜனங்கள் ஆயிரக்கணக்கானவ
ருக்கு வயிற்றில் மண்விழுகிறதாமே" என்றான்,
திண்ணை பிச்சைக்காரன். ஒருநாள் என் பெண்ணுக்
குதித்த ஞானச்செருக்குப்போலவே எனக்கும் உதித்
தது "ஒத்துழையாமை" இயக்கத்தின் தத்துவம், மேன்மை

நோக்கம், இவைகளைப்பற்றி எனக்குத் தெரிந்த மூட்டையை அவிழ்த்தேன். வணக்கமாயும் கவனமாயுங்கேட்கும் ஒருலவேரயடங்கிய மகாசபையில் நான் பேசத்தொடங்கினால் என்னைக்கட்டிப்பிடிப்பது அசாத்தியம். சாமாரியாய் சொற்பொழிவு பொழிவேன்! அது போலவே இப்போதும் சுமார் நான்குமணிநேரம் பேசினேன். மனுநீதிகண்ட சோழன்கதைக்கு மாத்திரம் இரண்டரைமணிபிடித்தது! கடைசியில், அவன் வெகுளித்தனமாய் "இதுவிஷயங்களை, நல்ல உபன்னியாசகர்கள் மூலம் கேட்கவேண்டும்" என்று சொன்னபோதுதான் என்னுடைய சொல்வன்மையின் உண்மைநிலைமை எனக்குப் புலப்பட்டது! அன்று முதல் அவன் எல்லாதேசியப் பிரசங்கங்களுக்கும் போய்க் கேட்பதும் மகாத்மா காந்தியின் கர்ம இயக்கத்தின் போக்கைப்பற்றிய சமாசாரம் நாள் தவறாது விசாரிப்பதுமாயிருந்தான்.

நேத்திரமில்லாத ஹாஜியார் நம் நகரத்திற்கு விஜயம் செய்தபோது, நம் ஊர் பிச்சைக்காரன் அவருக்கெதிரில், முதல் வரிசையில், தன் இணைபிரியாப் பெண்ணுடன் உட்கார்ந்திருந்தான். ஹாஜியார் பிரசங்கங்களின் சொல்வன்மையைக் குறித்துத் தமிழ் நாட்டாருக்குச் சொல்லவேண்டியதில்லை. திரள் திரளாகக் கூட்டம் வந்திருந்தது "லாங்கோட் தலைப்பாகை" முதலிய நாகரிகச்சின்னங்கள் அணியா ஜந்துக்களின் வாசனைகூட வெறுக்கும் சில வக்கீல் பிரபுக்களும் வந்து ஓரமாய் நின்றனர்.

கடைசிநாள் பிரசங்கம் அதி அற்புதமாயிருந்தது. ஏதோ வரம் பெற்றவரைப்போல் பேசினார். கடவுள் ஒருவரிடமே துளியேனும் சந்தேகமற்ற நம்பிக்கையை வைக்கவும், அவர் ஒருவருடைய செயலையே செய்யவும், நம் தேசத்தின் தற்காலத்திய கடினமான நிலைமையில் நாம் ஒவ்வொருவரும் நம்மாலியன்ற தியாகத்தைத் தாய்நாட்டின் பொருட்டுத்தயங்காது செய்யவும், வற்புறுத்தினார். அவர்சொற்களைக்கேட்டுக் கரையாத நெஞ்சமில்லை, உருகாத உள்ளமுமில்லை. சபையோர் அனைவரும் மூச்சுவிடவில்லை. நிஸ்சப்தமாய் ஸ்தம்பித்து நின்றனர். அசிரத்தையாயிருக்கும் மண்ணாந்தைகளும், கேலிசெய்யும் காலிகளுங்கூடத் திகைத்து நின்றனர். தமிழ்நாடு சேகரிக்கவேண்டிய வீதப்படி திலகர் ஸ்வராஜ்ய நிதிக்குத் தொகை அங்கேயே வசூலாகிவிடும் போலிருந்தது. ஏனெனில் சபையோர் மனப்பாங்கு அந்தநிமிஷம் தியாகத்திற்குத் துணிந்திருந்தது. ஆ! நம் நல்லெண்ணங்கள் கலையுறாது நிலைத்திருக்கும்படி ஸ்திரபுத்தியை ஈசன் அளித்தானில்லையே! (அதனால்தான் நம் தமிழ்நாட்டிற்காக பம்பாய் மாகாணம் வந்துதவும்படி நேரிட்டது.)

அக்கிராஸனாதிபதியும், இச்சொற்பொழிவாலுதித்த தியாகலயத்தை தன் சொற்களால் கலைத்துவிடக்கூடாதெனத்தயங்கி, ஆஸனத்தை விட்டெழாது சங்கடப்பட்டுக் கொண்டிருந்தார்.

இதன் மத்தியில் நம்முடைய பிச்சைக்காரன்

எழுந்தான். பார்வையின் போகத்தையளிக்கச் சக்தி யில்லாவிடினும் மனதுக்கு ஆறுதலையளிக்கும் இயல்பு குன்றவில்லையென, அவன் கண்களினின்றும் சொரியுங்கண்ணீர்த்துளிகள் விளக்கின. அவன் எழுந்திருக்கவே, அவன் பெண்ணும் எழுந்து, இருவரும் சபை நடுவே, கைகோர்த்து நின்றனர். இப்பரிதாபக்காட்சியைகண்டு, சிலகாலிகள் நகைத்தனர். ஆகிரோஸனர் அவர்களையடக்கி, எழுந்துநிற்பவனை நோக்கிக்குனிந்து கவனித்தார். பக்கத்தில் சுற்றிநிற்பவர்க்குக்கூட தெரிவாய்க்காதில் படாதபடி, கண்ணில்லாப் பிச்சைக்காரன் முணுமுணுத்தான். அதன் சாராம்சமாவது:—
"கனவான்களே! உபந்நியாசம் செய்தவரைப்போல நானும் கண்ணற்றவன். ஆனால் அவரது செல்வன்மை எனக்கில்லை. அவருடைய அற்புதப் பிரசங்கத்தைக்கேட்டதும் என்னைச்சூழ்ந்திருந்த மாயை இருள் நீங்கிவிட்டது. அவரே எனக்கு சத்குருவாகவந்து தோன்றினார். கைவிடாது காக்கும் கடவுளைமதியாது நின்றேன். இப்புண்ணிய பூமியில கூன, குருடு, நொண்டி, முடம் முதலிய நாதியற்ற ஜன்மங்களுக்கு, அவரே தக்க உதவி புரிவாரென்பதை மறந்து, நானாகவே குருட்டுயோஜனைசெய்து வந்தேன். பாரத்தை முழுதும் ஈசன்மேல் சுமத்திநிற்காத குற்றத்தை க்ஷமிக்க, என்சற்குருவே, ஈசனிடம் எனக்காக மன்றாடவேண்டும்! என் மனந்தெளிவுற்றதற்கு அறிகுறியாக நான் நெடுநாளாய் வயிற்றையும் வாயையும், ஒடுக்கிச் சேர்த்து வைத்திருக்கும் இம்மாயைக் குவியலை, அவ

தாரபுருஷன் மஹாத்மா காந்தி, லோகமானியர் திருப்பெயரால் ஏழைகளின் பொருட்டுச்சேகரிக்கும் நிதிக்குக் கொடுக்கின்றேன். இதை அங்கீகரித்து என்னைப் புனிதனாக்கக் கோருகிறேன்.” என்றுதன் இடுப்பில் சுற்றியிருந்த ஒரு அழுக்குத்துணியை அவிழ்த்து, அக்கிராஸனர் பாதத்திலெறிந்தான்.

அக்கிராஸனர், பயபக்தியாய் அந்த முடிச்சை அவிழ்த்து, அதிலிருக்கும் கந்தை நோட்டுகளையும் தேசல் காசுகளையும், கவனமாய்க் கணக்கிட்டார். அவரும், அவர் பக்கத்திருந்தவர்களும் திகைத்து நின்றனர். “இவ்வளவையுமா திலகர் ஸ்வராஜ்யநிதிக்குக் கொடுத்து விடுகிறாய்” என மெதுவாய்க்கேட்டார்.

“ஆம்” என்று பிச்சைக்காரன் ஒரேவார்த்தையில் பதிலளித்தான். இன்னும் சந்தேகந்தீராத அக்கிராஸனர் “இதிலே, இருநூற்றைம்பத்தேழு ரூபாய், ஒன்பதணா, ஏழுபைஸா, இருக்கிறதே” என மறுபடியும் கேட்டார்.

“எனக்குத்தெரியும். குருட்டுயோஜனை செய்து என்பெண்ணுக்கென்று சேர்த்துவைத்தேன். ஜனங்களிடமிருந்து வந்தபணம் அது. அதை ஜனங்களுக்கே சேர்ப்பித்து விடுங்கள். என்னை அபராதி ஆக்காதீர்கள்” என மன்றாடினான், பிச்சைக்காரன்.

அக்கிராஸனர்:— “பெரிய மிராஸ்தார்களும் கொழுத்த வரும்படியுள்ளோரும் கொடுத்த தொகைக்

மேலான இத்தனைகளைய, திலகர் ஸ்வாராஜ்யபிரதிக்காக இந்த”:...................

அவர் தயங்குவதைக் கேட்ட குருடன், “இந்தப் பிச்சைக்காரன்” என்று நன்றாய்ச் சொல்லுங்களேன். எனக்குப்பசியாவது குறைந்துபோய்விடும் ‘என’ முதல் முதல் உரக்கப்பேசினான்.

“இந்த தேசபக்தர்” எனச் சொல்லிமுடித்து மேலேபேச நாவெழாமல் அக்கிராசனர் உட்கார்ந்தார்.

“ஆகாயப்பந்தல்! குருட்டுப்பொஜனா! குருடனுக்குக் குருட்டுபக்தி! பசியை ஆற்றிக்கொள்வதற்கென்று கொடுத்த காசுகளை சேர்த்துவைக்கிறதப்பா! ஈசனது கருணைக் கடலும் வற்றுமென்றெண்ணியா, ‘குருடா’ என்று சொன்னார்! நல்லவேளையாய் இன்று அந்த மகான் நல்லபுத்தியைக் கொடுத்தார். தலையின்மேலிருந்துக்கொண்டிருந்த பெரியபாரம் நீங்கியதுபோல் சௌக்கியமாயிப்போதுதானிருக்கிறது” என முணு முணுத்துக்கொண்டே, பெண்ணை கைப்பற்றிக்கொண்டு, குருடன் எழுந்து சென்றான்.

பெரிய தியாகஞ்செய்த தேசபக்தர்களைக் கொண்டாடுவோர் துதியைக் கேட்டு மகிழ்ந்து மயங்கியிருந்த நாங்கள், குருடனால் கண்திறக்கப்பெற்று, வெட்கத்தால் குனிந்ததலை நிமிராது வீடுபோய்ச் சேர்ந்தோம். எத்தில் வகையால் கூட்டாத பிரபுக்கள் இன்று நம்மைப்பிடித்த கஷ்டகாலம், [illegible]

யிருந்தது; இல்லாவிடின் அந்தசமயத்தில் கையிலெவ் வளவிருந்தாலும் கொடுத்தேயிருப்பேன்" என்று பேசிக்கொண்டு சென்றார்கள்.

இக்கதையைப்படித்த, ஐயா, தங்கள் கட்டணம் செலுத்தியாய்விட்டதா? சர்வத்தியாக சக்தி நம்மெல் லோர்க்குமில்லாவிடினும், நம்மாலியன்ற அளவு தில கர் சுயராஜ்யநிதிக்கு உதவுதல், நம் கடமையும் பொறுப்பும், உரிமையுமன்றோ!

---

## II

## "கருணைக் கெட்டாத குற்றமில்லை"

தஞ்சை ஜில்லாவிலிருப்பதுபோல், பக்கத்திலிருக்கும் திருச்சி ஜில்லாவில அதிகப் பட்டணங்களில்லை. திருச்சி ஸ்ரீரங்கத்தை விட்டால், கரூர் ஒன்றையே பட்டணமென்றழைக்கலாம். சோழனுக்குத் தலைநகரா யிருந்ததெனச் சொல்லப்படும், கரூர் என்னும் நகரத்திலே, வெகுகாலமாக ஒரு ஸ்திரீ வசித்து வந்தாள். அவளுக்குத் தற்போது வயது சுமார் நாற்பதிருக்கலாம். திருச்சி ஜில்லாவில் அநேகருக்கு அந்த ஸ்திரீயின் சரித்திரம் தெரிந்திருந்தபோதிலும், சில காரணங்களாலும், அவளுடைய வேண்டுகோளை முன்னிட்டும், அவளைப்பற்றிய இச்சிறுகதையில், அவள் உண்மைப் பெயரை மறைத்து, அவளை "கமலாம்பாள்" என அழைக்கவேண்டியதாயிற்று.

"கமலாம்பாள்" தேவதாசியாள் குலத்திலுதித்தவள். தன் பிறப்புக்கேற்ற தொழிலைச் சரிவர நடத்தும் பொருட்டு, செல்வமுடைய அவள் தாயார் அவளுக்குத் தமிழ், தெலுங்கு, முதலிய பாஷைகள் கற்றுவைத்தும், சங்கீதமும், வீணையும், பரத சாஸ்திரமும் பயின்று வைத்திருந்தாள். கரூர் மட்டுமல்ல, மற்றைய ஊர்களிலேயும் கமலாம்பாள் பெயர் விளங்கிற்று. தன் அழகினாலும் சங்கீத இனிமையினாலும் புத்திக் கூர்மையாலும், ஆடவர் மனதை வசிகரஞ்செய்வதில், தேர்ச்சியடைந்தவளாய்

பிரசித்திபெற்று இருந்தாளென்றால், நிறைந்த செல்வமும், குறைந்த புத்தியுமுள்ள, ஜமீன்தார்களும் மிராசதார்களும் பூச்சிகள்போல் அவள் வலையில்வந்து சிக்கினார்கள் என்பதில் ஆச்சர்யமுண்டோ! தன் தாய் இருக்குமட்டும் ஏராளமாய் சம்பாதித்தாள். இவளுக்கு வயது சுமார் முப்பது ஆகுமுன், தாய் இறந்துவிட்டாள். அச்சமயம் மனைவியை இழந்த ஒரு உத்தியோகஸ்தர், கமலாம்பாளுடைய நாயகனாக வந்தார். அவர் நல்ல படித்தவர். சங்கீதத்திலும் தகுந்த ஞானம் வாய்ந்தவர். அவருடைய சகவாசத்தினால் கமலாம்பாளுக்குத் தன் தொழிலில் வெறுப்புண்டாயிற்று. சுமார், ஏழு எட்டு வருஷகாலம், அந்த நாயகனுடன் கட்டிய மனைவிபோல் நல்வாழ்வு வாழ்ந்து வந்தாள். அந்த உத்தியோகஸ்தருடைய உதவியால், நல்ல ஞானத்தைப்பெற்று, தன்னுடைய ஏராளமான சொத்தினின்றும் வருமானத்தினின்றும் அநேக ஏழைக் குடும்பங்களுக்கு உதவி புரிந்து வந்தாள்.

தகுந்த பொருளும் கையில் நிரம்பி, தாயையும் இழந்து, நல்ல சகவாசம் ஏற்படவே, தன்னோடு தன் குடும்பத்தில் தாசித்தொழில் ஒழியவேண்டுமெனத் தீர்மானித்துத் தனது சிறிய பெண்ணைப் பக்குவமாதற்கு முன்பேயே, ஒரு நல்ல பையனுக்கு விவாகம் செய்வித்து, அவர்களுக்கு வேண்டிய பூமி, ரொக்கம் முதலியவற்றை சீதனமாகக்கொடுத்து, அவர்களை வேறு ஒரு தெருவில் தனியாய் குடித்தனம் செய்ய ஏற்பாடு செய்தாள்.

பெடுக்காவண்ணம் அவர்களைக்கீழே இறுத்தி வைப்பதில், நம் தமிழ் நாட்டவருள் எந்த ஜாதியாரும் தேர்ச்சி பெற்றவரென்பதை, பஞ்சமரெனும் ஜாதியார், லக்ஷக் கணக்கானவர், இக்காலத்தும் படும்துயரமே, விளக்கும். நந்தன் பிறந்த நாட்டில், இன்னும், பிறப்பின் நிலைமையைக் கருமம் மாற்றும் எனும் உணர்ச்சி உண்டாகவில்லையென்பது எல்லோருக்கும் தெரிந்தவிஷயம்.

அநேகவித தர்மங்கள் செய்யவேண்டுமெனக் கமலாம்பாள் எத்தனித்தாள். அவ்வூரிலிருக்கும் பெரிய மனிதர்கள் அவைகளைத் தடுத்துவந்தனர். பாடசாலை ஏற்படுத்தினள். அதில் ஒருவரும் படிக்கக்கூடாதென சிலர் முயற்சிசெய்து தடுத்துவிட்டார்கள். கோவிலுக்கு சில காரியங்கள்செய்கிறேனென்றாள். தர்மகர்த்தாக்கள் இடங்கொடுக்கவில்லை. ஆயினும் மனந்தளராது, தன் பொருள்களை ஏழைகளின்நிமித்தம் செலவிட்டுவந்தாள். அவர்களும் அவளிடத்தில் நன்றி பாராட்டிவந்தாகள். பெரிய மனிதரெனப்படுவோரெல்லாம் ஒன்றுகூடுங் காலத்தில், அவளை இகழ்ந்தும், அவள் பொருளை பள்ளிக்கூடம் முதலிய பொது விஷயங்களுக்கு எடுத்துக் கொள்ளைதை பாவமெனக் கண்டித்தும் வந்தபோதிலும், தனித்தனியாய் அவளிடமிருந்து உதவி பெறுவதற்குத் தயங்கவில்லை. அவள் நல் வாழ்வுக்கு முக்கிய விரோதியாயிருந்த, ஒரு பெரிய செல்வாக்குள்ள தனிகர், துன்மார்க்கத்திலே தன ஐசுவரியத்தைப் பெரும்பாலுந் தோற்றவர். அவள் நன்னிலை குலையச் செய்த இடையூறுகள் இவ்வளவவ்வளவில்லை. இப்படியிருக்கும்

சமயத்தில், சிலர் ஸ்வராஜ்ய நிதிக்கு வசூல் செய்வதற்காக, நாங்கள் கரூருக்குச் சென்றோம். அங்கே சில நண்பர் மூலியமாய், கமலாம்பாளுடைய வரலாற்றையும், தர்ம சிந்தனையையும்பற்றி கேள்வியுற்று, அவளிடம் போய்க் கேட்கலாமெனத் துணிந்தோம். அவ்வூர் பெரிய மனிதர்கள் சிலருக்கு அது அதிருப்தியைக் கொடுத்தது. அதற்கேற்ப, சென்ற எங்களுக்கும் திருப்தி அதிகமுண்டாகவில்லை. "இந்தப் பாவியின் வீட்டிற்கும் இவ்வளவு பெரிய மனிதர்கள் வந்தகாரணமென்னவோ" என, அவள் மனங்கசந்து கேட்ட கேள்விக்கு, என்னுடன் வந்த கரூர் வாசிகள், பதிலுரையாது தலைகுனிந்து, என்னைக் கண்ணோக்கினார்கள். நான் விஷயத்தை அறிவித்தேன். "அவ்வளவு மேன்மையான நிதிக்குவியலில், பிரஷ்டையான என் பணம் சேர்ந்தால், நிதி அசுத்தமாய் விடாதா" என இடித்துக் கேட்டாள், கமலாம்பாள்.

"கடவுளுக்கு எப்படி, எந்தமனிதருடைய நைவேத்யமும் சம்மதியாயிருக்கிறதோ, அதுபோலவே, எவர், எதை மனப் பூர்வமாயளித்தபோதிலும், இந்த நிதிக்கு ஏற்றுக்கொள்ளவேண்டும். அஃதன்றி, தனவந்தர் ஆயிரக்கணக்காய் செலவழித்துச் செய்யும் உற்சவங்களிலும், ஏழைகள் தங்களாலான கற்பூரத்தைக் கொளுத்துகிறதுபோலவே இந்த நிதிக்கும். இந்திய பூமியிற் பிறந்தோர் ஒவ்வொருவரும் தங்களாலியன்றதை உதவவேண்டும்" என்றேன்.

சற்றுநேரம் நிதானித்து, பத்துரூபாய் நோட்டை எடுத்துக்கொடுத்தாள். "தங்கள் தரும சிந்தனையைப் பற்றிக் கேள்வியுற்று நாங்கள் தங்களிடமிருந்து வெகுவாய் எதிர்பார்த்து இங்கு வந்தோம்" என என் அதிருப்தியை வெளியிட்டேன்.

நான் மரியாதையாகப்பேசவே கமலாம்பாள் முகத்திலிருந்த கசப்பு மாறிற்று. "வந்தவர்களை வெறுங்கையாய் அனுப்பக்கூடாதென்று, கையால் இல்லையென்பதுபோல் இதைக்கொடுத்தேன். நான் இந்த நிதி விஷயத்தைப்பற்றி, இன்னும் நன்றாய்த் தெரிந்துகொண்டபின்னர், என்னுலியன்றதை நாளுகவே செய்வேன். தற்போது என்னை மன்னிக்கவேண்டும்" என்று விடைகொடுக்க, நாங்கள் வெளிக்கிளம்பினோம். வெளிவந்தவுடன், "வந்தபோது கொடுக்காதவள் பிற்பாடு கொடுக்கப்போகிறாளாம்" என்றும், இன்னும் கேவலமாகவும் சிலர் பேசத்துடங்கினர். அவர்களை அடக்கிவிட்டு, பிறகு ஊர் சுற்றினோம். சென்றவிடமெல்லாம், "தேவடியாள் உங்களுக்குப் பத்து ரூபாயைக் கொடுத்து அனுப்பிவிட்டாளாமே; அதிகமாய்க் கொடுத்தால் குறைந்துபோய்விடுமோ; கஷ்டப்பட்டு ஈட்டியபொருளோ" என்றெல்லாம் அவளை இகழ்ந்த பிரபுக்களில் பெரும்பாலர், கடைசியில் தங்கள் பையில் கை விடும்போது, பத்து ரூபாயில் பாதிகூடக் கொடுக்காமல் "அவளவ்வளவு தனம் எனக்கிருந்தால், குறைந்தது ரூபாய் ஆயிரமாவது கொடுத்திருப்பேன்" என, வாய்க்கொடையோடு நின்று விட்டார்கள்! வள்ள

லை வழங்கும் தனிகர்மட்டும். தனக்கும் அந்தக்
கேவலமான ஸ்திரீகள் இருக்கும் பேதத்தை வெளிப்
படுத்தும் பொருட்டு ரூ 1500 கொடுப்பதாக வாக்க
ளித்து, அதை கூடிய சீக்கிரம் அனுப்புவதாகவும்
உறுதிமொழி கூறினர். இது நடந்த சில மாதங்களுக்
கு பின்னர், மகாத்மா காந்தியே திருச்சி நகருக்கு
விஜயஞ்செய்தார்.

அப்போது திருச்சி நகரில் நடந்த, உற்சாகமும்,
ஜனக்கூட்டமும், கொண்டாட்டமும், சகலருக்குந்
தெரியும். திருச்சி ஜில்லாவில் மூலை முடுக்கு கிராமங்
களிலிருந்துங்கூட ஜனங்கள் மகாத்மாவை தரிசிக்க
வந்தனர். மற்ற ஊர்களில் இருந்ததுபோலவே, மகாத்
மாவைக் கூட்டத்தினின்றும் காப்பாற்றி, ஜாகைகொ
ண்டு சேர்ப்பதே வெகு கஷ்டமாய்விட்டது. ஜாகை
சேர்ந்து கொஞ்சநேரம் இளைப்பாறுவதற்காக, மகாத்
மா தனியறைக்குச் சென்றிருந்தார் நாங்கள் மகாத்
மாவின் கூடவந்தவர்களுக்கு விசிறிக்கொண்டும், மற்
றைய உபசாரணைகள் செய்துகொண்டும் வேறு அறை
யிலிருந்தோம். அப்போது கமலாம்பாள் அங்கு
வந்து சேர்ந்தாள். அவள் வரவைக்கண்ட அங்கிருந்த
கரூர் வாசிகள் சிலர், முகத்தைச் சுழித்தனர். என்னைத்
தனியாயழைத்து, தான் மகாத்மாவை தரிசிக்கவேண்
டுமென்றாள். நான் மகாத்மாவிடம் சென்று உத்தரவு
பெற்று வருவதாகச் சொல்லிச்சென்றேன். அங்கிரு
ந்த கரூர் வாசிகளில் சிலரும், சில இதர பிரமுகர்களும்
நகைத்தனர்

மகாத்மாவிடம் தெரிவித்தவுடன், அவர் உடனே அவளை வரச்சொல்லி உத்திரவளித்தார். நானும், அங்கு காலையிலிருந்து காத்திருக்கும் பிரபுக்கள் பொறுமையால் செய்த ஏளனத்தை, பொருட்படுத்தாது, அவளை அழைத்துச்சென்றேன். கமலாம்மாள், மகாத்மாவை நமஸ்கரித்து தன் கையிலிருந்த ஒரு ஓலையை அவரிடம் கொடுத்தாள். தமிழில் எழுதியிருந்த அவ்வோலையை நானே படித்தேன். அதில் தன் வரலாற்றையும், தான் தாசித்தொழிலில் வெறுப்புக்கொண்டு, அத்தொழிலை தானும் விட்டு, தன் மகளுக்கும் விவாகம் செய்வித்ததையும், தனக்குப் பிறவியாலேற்பட்ட தாழ்ந்த நிலைமையினின்றும் மீளுவதற்குதான் செய்யும் முயற்சியையும் சுருக்கமாயெழுதி, தன் உடலை விற்று பொருள் ஈட்டிய பாவம் தொலைவதற்காக, தான், மகாத்மா சேர்க்கும் நிதிக்கு உதவிபுரிவதையேற்று, தன்னைப் புனிதமாக்குமாறும், தான் இன்னும் செய்ய வேண்டிய பிராயச்சித்தங்களை மகாத்மாவே விதிக்க வேண்டுமென்றும் சுருக்கமாயெழுதியிருந்தாள். உண்மை பொலியும் அச்சிறு கடிதம் அவளது உள்ளத்திலிருக்கும் துன்பத்தை வெளியுற வெளியிட்டது. கடிதத்தின் கருத்தைக்கேட்ட மகாத்மா, தனது தெய்வீகப் புன்னகையுடன் "என்ன காணிக்கை கொண்டு வந்திருக்கிறாள்?" என்றார். கமலாம்பாள் தன் கையிலிருந்த சிறு வெள்ளித் தட்டை, அவர் பாதத்தில் வைத்தாள். அதை அன்புடன் மகாத்மா இருகையாலும் எடுத்து "இவ்வளவு மனப்பூர்வமாயல்லவோ, லோகமான்யரின் பெயரை நிலை நிறுத்தும் நிதிக்கு

எல்லோரும் கொடுக்கவேண்டும்" என்றார். கமலாம்பாள் கண்களில் நீர் ததும்பிற்று. அன்பாலுருகாத நெஞ்சம் ஏது! அங்கு அச்சமயம் எட்டிப்பார்த்துக் கொண்டிருந்த, சில வக்கீல்களும் அசைவற்றிருந்தனர். "எனக்கென்ன உத்திரவு? இச்சன்மத்தில் எனக்கு ஜனங்களுக்கு நிகரே கௌரவத்தோடு வாழும் பாக்கியம் கிட்டுமா?" என்றாள்.

"என் சொல்லுக்குக் கிஞ்சித்தேனும் மதிப்பு வைக்கும் எவரும், உன்னிடம், உன் சீர்திருத்தத்தால் எனக்கு உதித்த மரியாதையைப் போலவே, மரியாதை பாராட்டி, உன் நடத்தையால் நற்புத்தி பெற்று வாழ்வார்கள். பிறவி முதல் நற்பழக்கத்தில் வளருகிறவர்களுடைய நன் நடத்தை அரிதன்று. உன்போன்றோருடைய நன் நடத்தை மெச்சத்தக்கது" என்று அவள் சேர்ப்பித்த காணிக்கையைப் பிரித்துப்பார்த்தார்.

அதில் ரொக்கம் பத்து நூறு ரூபாய் நோட்டுகளும், ஒரு ஜதை வைரக்கம்மலும் இருந்தது.

"இந்த சமலக் கம்மலையும் நிதிக்கு அளிக்கிறீர்களா" எனக்கேட்டார்.

"ஆம்! அதுவே நான் இனி ஆடவரை, வசீகரிக்கும் எண்ணத்தை விட்டொழித்தேன் என்பதற்கு அடையாளம்" என்றாள்.

"நல்லது, நிதிக்காக எவ்வளவு வந்தபோதிலும், இன்னும் கேட்க என் மனம் நாணுகிறதில்லை! ஆ! உன்போல நல்ல சிந்தனை, உடலைவிற்றுப் பிழைக்கும்

இந்திய புருஷருக்கும், உண்டாகி விட்டால், அன்றே ஸ்வராஜ்யம் நமக்குக் கிட்டிவிடும்'' என்றார்.

இதுகேட்ட, அங்கிருந்தவர்கள், அவர் கருத்தை யறியாதவர்கள்போல், புருஷத்தைத் தூக்கவே, மகாத்மா,பின் வருமாறு தன்கருத்தை வெளியிட்டார். "இங்கிருக்கும் ஸ்திரீயை, பிறவிமுதல் ஒருவழியில் பழக்கி வந்தார்கள். தனக்கு மனமொவ்வாதாரிடம், தன் உடலை விற்கும்படி அவளை, அவளைச்சேர்ந்தவர்களும், பொது ஜனங்களும் தூண்டினார்கள். கடைசியாய் தானே தன் தொழிலை வெறுத்து தற்போது, தர்ம கைங்கர்யத்தில் ஈடுபட்டிருக்கிறாள். அவளைப் புகழ்ந்து அவளிடம் மரியாதை கூட்டுவோர் அரிதாயிருக்கிறது! ஆயினும், பிறவியில் நல்ல இடத்தில் பிறந்து, நல்ல புத்தியும் கற்பிக்கப்பட்ட அநேக புருஷர், (புருஷ உருவமாய் வந்தவர்) தங்களுக்குத் துளியேனும் மதிப்பில்லாத அந்நிய அதிகாரிகளுக்கு, தங்கள் உடலை விற்று, தங்கள் வயிறு வளர்த்துக்கொண்டு வருகிறார்களல்லவா! அவர்களை நம்மவர்கள் பெரியமனிதர்கள் எனக் கொண்டாடுகின்றனர்! இவளாவது தன் உடலைமட்டும்விற்றாள். அவர்களில் பலரோ, பொருளின் நிமித்தம், தங்கள் உடலையும், ஆவியையும் கூட விற்றுவிடுகின்றனர். என் புத்திக் கெட்டியவரை, குற்றமென்று தெரிந்தும் குற்றத்தையே செய்துவரும், இவ்வுத்தியோகஸ்தர்களோ, விலை மாதரை விடத் தாழ்ந்த நிலைமையை அடைந்தவர்களாவார்கள். இந்த அம்மாளைப் போல், அவர்களுக்கும் என்றைக்கு நல்ல

புத்தி வருமோ, எனப் பிரார்த்தித்துக்கொண்டிருக்கிறேன்" என்றார்.

பதிலுரைக்க முடியாது எல்லோரும் திகைத்து நின்றனர். மகாத்மா "இனி நான் வக்கீல்களுடன் வார்த்தையாடவேண்டும். அவர்களும் இந்த ஸ்திரீயைப்போல், மனமொவ்வாத தொழிலால் பொருளீட்டுவது தவறென்று கண்டுகொண்டுவிட்டால், எனக்கு வேலை எளிதாகிவிடும். ஆனால் அவர்கள் தர்க்கத்தில் தேறியவர்கள். அவர்களிடமிருந்து இவ்வளவு சுலபமாய் மீண்டுவர இயலாது" என, புன்னகையுடன், தன் இருகைகளையும் எடுத்துக்கும்பிட்டுக் கமலாம்பாளுக்கு விடை அளித்தார்.

இவ்வாறு தன்னையும் மரியாதைக்குறித்தானவளை மதித்ததற்காக உளம் பூரித்து, அந்த அம்மாள் கண்களில் நீர் ததும்ப, அவர் பாதத்தில் வீழ்ந்து, நமஸ்கரித்து, "அடியேன், இன்னும் என்ன பிராயச்சித்தங்கள் செய்யவேண்டும். தேவரீராலேயே நான் கடைத்தேறவேண்டும்" எனக்கேட்டாள். பாரத கண்ட முழுவதும், ஒருபோது, இல்லாவிடில், மறுபோதாவது கண்டார் மனதைக் கவர்ந்த மந்தஹாஸத்துடன், மஹாத்மா "இனி என் செய்யவேண்டுமா? இங்கிருக்கும் உன் நண்பர்கள் சொல்ல வில்லையா? இராட்டினம் வாங்கி நூல் நூற்கவேண்டும்; மறுமுறை நான் இங்குவருவதற்குள், உங்கள் கையினாலேயே நூற்ற நூலினாலேயே நெய்த சேலையை உடுத்தியே

என்னைப்பார்க்க வரவேண்டும். அதுதான் எனது வேண்டுகோள்" என்றார்

"அப்படியே ஆகட்டும்" என்று, கமலாம்பாள், "ஊரார் என்னைத் துன்புறுத்துகின்றனரே, அதற்கென்ன செய்யட்டும்" என்று மீளவும் கேட்டாள். "அவர்களும், தானே நல்ல வழிக்கு வருவார்கள். நீங்கள் மட்டும் உறுதியுடனிருக்க வேண்டும். அப்படி இவ்வூரில் அதிக கஷ்டமாயிருந்தால், வேறு ஊருக்குப் போய் சத்காலக்ஷேபம் செய்துகொண்டிருக்கலாமே" என்று பதிலளித்து எழுந்தார்.

அங்கிருந்த அனைவருக்கும் மகாத்மாவின் தெய்வம்போன்ற, அண்டினோர்க்கபயம் அளிக்கும், கருணை குணத்தால் மனமுவந்தபோதிலும், இக்காட்சியைக் காணாது கீழிருந்த சிலருக்கு "தேவடியாளுக்கும் தரிசனமா" என்ற எண்ணத்திலேயே, புத்திபோயிற்று. என்னையும் கண்டு நகைத்தனர்.

ஆனால் மகாத்மாவின் அருள் கடாக்ஷம்பெற்ற கமலாம்பாளும், அதை லக்ஷியம்செய்யவில்லை. பெரிய தனிகர் ஜம்பத்திற்காக, ரூ 1500 கொடுப்பதாய் வாக்களித்து, ஒரு பைசாக்கூடக் கொடுக்க மனம் வராதவரையும், பயபக்தியுடன் மனப்பூர்வமாய், இரண்டாம் பேருக்குத் தெரியாமல மகாத்மா கையிலேயே நேரில் சுமார் ரூ 6000 பொருமானமுள்ள நகையைக் கொடுத்து உதவிய தர்மிஷ்டையையும், மனதில் ஒப்பிட்டுப் பார்த்துக்கொண்டிருந்த நானும், அதைப் பொருட்படுத்தவில்லை.

நண்பர்காள்! ஆயிரக்கணக்காய் மகாத்மாவை தரிசிக்க வந்தீர்களே! அவர் மனமுவந்த காட்டிய துறைகளிலிறங்கி, காரியத்தால் உங்கள் உள் அன்பை வெளியிடுகிறீர்களா?



# IV

## முருகேசமுதலி.

மகாத்மா காந்தியும், மௌலானா ஷவுகத் அலியும் திருச்சிக்கு வந்து போய் சுமார் இரண்டு மூன்று நாள் வரையில் அவர்கள் வரவைப்பற்றி பேசுவதும் திருச்சியில் அவர்களுக்கு நடந்த உபசாரணையின் சிறப்பைக் குறித்து தற்புகழ்ச்சி கொண்டாடுவதிலேயுமே, காலத்தைக் கழித்தோம்.

பிறகு ஒரு நாள் மத்தியானம், மகாத்மாவின் கம்பீரக் குரலைக்கேட்டு ஆனந்தித்த "முருகேசமுதலி" என்ற குருட்டு பிச்சைக்காரன் தான் கண்குளிர மகாத்மாவின் உருவத்தைப் பார்த்து ஆனந்திக்கவும் தனக்குப் பிராப்தமில்லையே என என்னிடம் சொல்லி வருந்திக்கொண்டிருக்கையில், கமலாம்பாள் அங்கு வெகு அச்சத்துடன் வந்து சேர்ந்தாள். குடும்ப ஸ்திரிகள் நிறம்பிய வீட்டில் தன் வரவை எப்படி ஏற்பார்களோ வென்று அஞ்சும், அப்புண்ணியவதியை நான் மரியாதையோடு உபசரித்து, வந்ததின் காரணத்தை விசாரிக்க, அவளும் முகமலர்ந்து, அங்கு "கருமமே கண்ணாயினர்" களைப்போல் முனைந்து, வெகு ஆடம்பரத்தோடு நூல் நூற்றுக்கொண்டிருக்கும் பெண் குழந்தைகளைச் சுட்டி, "அந்த விஷயமாய்த் தான் வந்தேன், எனக்கு ஒரு இராட்டிணம் வேண்டும் நூல் நூற்பதற்கும் கற்றுக்கொடுக்கவேண்டும்" என்றாள். அவளுக்கு நான் பதிலளிக்கு முன்னர், அங்கிருந்த முருகேசமுதலி "சுவாமி! இந்த அம்மாளுடைய

ன்கொடையைப்பற்றித் தான் தாங்கள் சொன்னீர்
களோ?" எனக் கேட்டான்.

"ஆம்" என்று பதிலளிக்க, "அம்மணி ஏழை
பிச்சைக்காரன் கும்பிடுகிறேன்" என்று கமலாம்பா
ளைக் கும்பிட்டான். உடனே கமலாம்பாள் "இவர்
யாரோ தெரியவில்லை. ஒரு சமயம், இவ்வூரார் அனை
வரும் புகழ்ந்து கொண்டிருக்கும்"........

அவள் கேள்வியைக்கேட்டு முடிக்குமுன், குறிப்
பறிந்த நான் "ஆம் அவர் தான் முருகேசமுதலியென்
பவர். இவ்வூரில் சில வருஷங்களாய் பிச்சைக்காரனைப்
போலவசித்துவந்து, கடைசியில் கொஞ்ச நாட்களுக்கு
முன்னர், தனது தியாகசிந்தையால், எங்களனைவரையும்
வெட்கிக்கச்செய்து, தன்னையும் புகழ் சூழும்படி தன்
பொருளனைத்தையும், திலகர் ஸ்வராஜ்ய நிதிக்கீந்தவர்'
என்று கூறினேன் இதுகேட்ட முருகேசமுதலி "அம்
மணி! ஐயா சொல்வதைக்கேட்டு நான் ஏதோ பெரிய
மனிதனென்று எண்ணிவிடாதீர்கள். நான் ஏழை குருட்
டுப் பிச்சைக்காரன். எனக்கு தியாகசிந்தையுமில்லை
ஒன்றுமில்லை. திலகா ஸ்வராஜ்ய நிதிக்கு நான்கொடுத்தது
சிறு தொகை. நீங்கள் கொடுத்ததில் இருபதில் ஒருபங்கு
கூட இல்லை அதை நான் கொடுத்ததும், தேசபக்தி
அதிகரித்ததாலுமன்று, தியாகசிந்தை மேலோங்கியதா
லுமன்று. அது ஒரு சொந்த காரணத்தை முன்னிட்டு
கொடுத்தேன். ஆகையால் ஐயர் கூறும் புகழ் சொற்க
ளுக்கு நான் அருகனல்ல" என்றான். கமலாம்பாள்
"காரணமேதாயிருந்தபோதிலும், செய்த காரியம்

நல்ல காரியமாயிருந்ததால், ஐயர் மெச்சிக்கொண்டதில் தவறில்லை" என்றாள். "என்ன காரணத்தின்பொருட்டு அந்தப் பொருள் கொடுத்தது" என நான் கேட்டேன். "அதை சொல்வதானால் என் வரலாற்றை முழுவதும் சொல்லவேண்டியிருக்கும், அதற்கு தற்போது அவகாசம் இருக்குமோ?" என்றான். "தாராளமாய் சொல்லலாம்" என்றேன் நான். "அவசியம் இப்போதே சொலலவேண்டும் ஏனெனில் நான் இங்கு இராட்டிணை வாங்கும் எண்ணத்தோடுகூட வேறொரு உத்தேசத்தோடும் வந்தேன். அதைத் தெரிவிப்பதற்கு முன்னர், தாங்கள் வரலாற்றைக்கேட்பது நன்று" என்றாள். கமலாம்பாள்.

"நான் சென்னையில் நல்ல குடும்பத்தில் பிறந்தவன். எனக்குத் தாய், தகப்பனிட்ட பெயர் முருகேசனல்ல. ஆயினும், எனக்கும் என் குடும்பத்தாருக்குமிருக்கும் சம்மந்தம் அற்றுபோக வேண்டுமென்று நான் எண்ணியதால என் பெயரை மாற்றி முருகேசனென்று வைத்துக்கொண்டேன்' என்று ஆரம்பித்து, பின் வரும் தன் வரலாற்றைக் கூறினான். "நான் தகுந்த குடும்பத்தைச் சேர்ந்தவனாயிருந்தபோதிலும், வியாபாரத்தில் பெருத்த நஷ்டமேற்பட்டதால் நாங்களெல்லோரும் வெவ்வேறு தொழில்களை செய்யவேண்டியதாய் விட்டது. நானும் சென்னையில் ஒரு தொழிற் சாலையில் வேலைக் கமர்ந்தேன். அந்த இடத்தில் அநேகம் ஆட்கள் வேலைசெய்து கொண்டிருந்தனர். அவர்களுள் அநேகர் என்னைப்

போல் நாள் கூலியை வாங்கிக்கொண்டு சாராயக் கடைக்குப் போய்விட்டுத்தான் தங்கள் வீடுபோய்ச் சேருவார்கள். வெகு நாள் வரையில் நான் சம்பாதிப்பதை நாள் தவறாது வீட்டிற்கே கொண்டுபோய் கொடுத்து வந்தபோதிலும், கடைசியில் சேர்க்கை தோஷத்தால் என் கால்களும் சாராயக் கடையை நாட ஆரம்பித்தது. என் மேல் இதன் நிமித்தம் என் சகோதரர்களுக்கு தீரா அருவெருப்பு ஏற்படினும் உடன் பிறந்த கடனுக்காக எனக்கு, அன்னமளித்து வந்தார்கள்."....................

"குடி வழக்கமாயிருந்ததா?" என, ஆச்சரியத்துடன் கேட்டேன்.

"ஆம் ஸ்வாமி" என தலைகுனிந்து ஒப்புக்கொண்டு "ஆனால் அதை விட்டும் வெகு நாளாயிற்று. மேலே கேளுங்கள் இப்படி என் வீட்டார் வெறுக்க, எனக்கென்று பெண் கொடுக்கிறேன் என்று வந்தவர், என் தீய வழக்கத்தைத் தெரிந்துகொண்டு, வேறு மாப்பிள்ளைதேட, சுமார் ஒருவருஷ காலம் கழிந்து வந்தேன். பின்னர் ஒருநாள் தொழில் சாலைக்கு ஒரு நண்பன் வீட்டுக் கலியாணத்திற்குப் போய் தாக சாந்தி செய்து போயிருந்ததால், வேலை செய்யும்போது கவனமில்லாது செய்து, என் முகத்தில் திராவகம் சிதறி அடிக்க உடனே எனை ஆஸ்பத்திரியில் கொண்டுபோய் போட்டார்கள். மூன்று மாதம் அங்கிருந்து நான் வெளியேறியபோது இரண்டு கண்ணும் இழந்த குருடனேனேன்.

கண்களிழந்த நான் என் சகோதரர்கள் ஆதர விலேயே இருக்க நேரிட்டது. அவர்களும், பிரிய மாகவே எனக்கு அன்னமிட்டு வந்தார்கள். ஆனால் என்னைப் பிடித்த சாராயப்பேய் என்னை வாட்டிற்று. அந்த அவாவைத் தீர்த்துக் கொள்வதற்காக என் சகோதரர்கள் வேலைக்குப் புறப்பட்ட பிறகு நான் ஒருவரும் அறியாமல் வெளிக்கிளம்பி என் பழைய தோழர்களிடத்தும், மற்றவர்களிடத்தும் இரந்து என் தாகத்தைத் தீர்த்துக்கொண்டிருந்தேன். என் அண்ணிமார்களை சில வேளைகளில் சாராய வெறியி லிருக்கும்போது வாயில் வந்தபடி ஏசி விடுவேன். அவர்களும் என் அண்ணன்மார்களிடம் என் செய் கைகளைக் குறித்து முறையிட்டும், குடும்பத்தின் கௌரவத்தையே கெடுக்க வந்த கோடாலிக் காம் பென என்னைக் கண்டித்தும், நான் திருந்தவில்லை. கடைசியாய் ஒருநாள் நான் வெளியேபோய் பல இடங் களில் அலைந்து பார்த்தும் எங்கும் காசு அகப்படாத தால் மனம் நொந்து வீடுவந்து அண்ணிமார்களிடம் வழக்கம்போல் சண்டையிட, அவர்கள் பொறுக்க மாட்டாமல், என்னை துடைப்பத்தால் அடித்து வெளியே வெருட்டி விட்டார்கள். இதைக் கண்டு தெருவாரும் என்னைக்கண்டு நகைக்க 'இனி பிச்சை யெடுத்தாவது சாப்பிடுவேனே யொழிய இந்த வீட் டிற்குள் நுழைகிறதில்லை' என்று கிளம்பிவிட்டேன். அண்ணிமார்களும், 'பிச்சை யெடுத்து பசியாற சாப் பிடுவாயோ, தாகந்தீர சாப்பிடுவாயோ என்ன வேண்

னாலும் செய், எங்களால் இனித்தாளாது' என்று என்னைத்துரத்தி விட்டனர்.

பிச்சையெடுத்துக்கொண்டே ஊர் ஊராய்ச் சென்றேன். நமது கர்ம பூமியில் பிச்சைக்காரரைப் போன்ற கவலையற்ற வாழ்வு எவர்க்கும் இல்லை. எந்த ஊரிற்சென்றாலும் தட்டில்லாமல் செலவிற்கு வேண்டியபணத்திற்கும், வயிற்றிற்குவேண்டிய உணவிற்கும் தூண்டுவதற்கு வேண்டிய சத்திரம் சாவடிகளுக்கும் குறைவில்லை. மேலும் அரசாங்கத்தார் தயையினால், தாகந்தணியக் குடிப்பதற்கு சாராயத்திற்கும் பஞ்சமில்லை. நாங்கள் கூட்டம் கூட்டமாய் உல்லாஸமாய்த் திரிந்துகொண்டிருந்தோம். ஒருநாள் என்னுடனிருந்த பரதேசி ஒருவர் கண்ணில்லாத நான் தனியாயிருப்பது தவறென்றும், தனது மகளை நான் மனைவியாகக்கொண்டால், எனக்குத்தகுந்த துணையாக இருக்குமென்றும் போதித்தார். பரதேசிக்குப் பெண் ஏது என நீங்கள் சந்தேகிக்கக்கூடாது. குழந்தைகள் இல்லாத பரதேசிகள் அநேகர் இருப்பின் அவர் பெண்களில் பலர் மலடிகளாயிருப்பதாலேயே ஒழிய வேறு காரணம பற்றியல்ல"..............

ஸ்திரிகள் சூழ இதைக் கேட்டுக்கொண்டிருப்பதை கவனித்த நான் 'ஆம் ஆம், அதெல்லாம் நமக்குத்தெரிந்த விஷயம்தான். மேலே விஷயத்தைச் சொல்' என்று அணைபோட்டேன்.

"ஸ்வாமி! மன்னிக்கவேண்டும். பிறகு அவ

மனைவியாகக்கொண்டேன். பெண்ணும் மாப்பிள்ளையும் பிச்சைக்காரர்களாயிருப்பினும் செலவில்லாமல் கலியாணமுடியவில்லை. ஒரே நாள் சடங்குதான். 'நடு மனைத்தாலி' என்று சொல்லுவார்கள் அதை. அதிலும் வேறு சடங்குகளில்லை. பரதேசிக் கூட்டங்கள் அன்று எல்லோரும் கொணடுவந்த அரிசியைச் சேர்த்துப் பொங்கி ஒரு கூட்டமாய் சாப்பிட்டார்கள். இரவில் தாகசாந்திச் செலவுமட்டும் எங்களுடைய செலவு; அதிலே சுமார் இருபது ரூபாய்க்குமேல் ஆய்விட்டது. என் கையிலிருந்த தொகையும் என் மாமனார் பரதேசி கையிலிருந்த தொகையும் முழுதும் தீர்ந்து விட்டது. பின்னர் தம்பதிகள் நாங்கள் இருவரும் தனியாகப் புறப்பட்டு விட்டோம். என் துணையாய் வாய்த்த ஸ்திரீ அதி புத்திசாலி, நல்லமனமுடையவள். அவளிடம் ஒரே ஒரு குற்றம். சாராயக்கடை விஷயத்தில், என்னையும்விட அதிகப் பழக்கமுள்ளவள்".

"சரியான ஜோடி." என்றாள் என் மனைவி; எல்லோரும் நகைத்தோம்.

"நாங்களிருவரும் இப்படி செலவு விஷயத்தில் ஒரு மனப்பட்டிருந்தும் எங்களுக்குக் குறையொன்றுமில்லை. புத்திசாலியான என் மனைவியின் சாதுர்ய வாக்கியங்களால் கரையாத நெஞ்சமில்லை. கருமிகளையும் காசு கொடுக்கச்செய்து விடுவாள். என்னையும் பிரியத்தோடு காப்பாற்றி வந்தாள். கையிலும் நாங்கள் எப்போதும் பணம் வைத்து வந்தோம். இப்

பமாயிருக்க கர்ப்பவதியானாள். மாதங்கள் ஆக ஆக என் மனைவிக்கு, பெரிய பட்டணங்களில் என்னையும் இழுத்துக்கொண்டு, வண்டிகள் முதலிய ஆபத்துகள் நிறைந்த தெருக்களில் சஞ்சரிப்பது கடினமாயிருந்தது. மேலும் கர்ப்ப காலத்தில் ஸ்திரீகளுக்கு என்றைரும் இல்லாத நூதனமாயும், சிலவேளை விபரீதமாயும் உள்ள அவாக்கள் உதிப்பது ஸகஜமல்லவா? அதுபோல் பிறவி முதல் பெரிய பட்டணங்களிலேயே வசித்தவள் கிராமாந்தர வாசம் வேண்டுமென்றாள்.

என் மனைவியை நோக்கி, அதை கவனிக்கும்படி எச்சரிக்கை செய்தேன். ஏனெனில், அன்று விடியற் காலையிலேதான் நகை விஷயமாய், எங்களுக்குள் நடந்த ஒரு தர்க்கத்தில், நான் அவளிடம் அது உண்மையில் அவளுக்கு வேண்டியதில்லையென்றும், கர்ப்பிணிகளின் மனம் மாறு பட்டால், அந்த நகை வேண்டும் போல் தோன்றுமென்றும் சொல்லியிருந்தேன்.

அவள் வேண்டுகோளின்படியே, கிராம வழிகளில் புகுந்து ஜெயங்கொண்ட சோழபுரமென்னும் சிறு பட்டணத்தில், பிச்சை யெடுத்து, பக்கத்திலுள்ள உடையார்பாளையம் ஸமஸ்தானத்தைச்சேர்ந்த கிராமங்களில் வசித்து வந்தோம். சோழ ராஜர்கள் அங்கு கொஞ்ச தூரத்திற்கு தூரம் ஒரு குளமும் வெட்டி பக்கத்தில் வழிப்போக்கர் தங்குவதற்கு சாவடிகளும் கட்டி வைத்திருப்பது, எங்களுக்கு சவுகரியமாயிருந்தது. குளங்களில் பல, தற்போது, இடிந்து

பாழாய்க் கிடக்கின்றன. தண்ணீரும் வெய்யிற்காலத்தில் வற்றிப்போய்விடுகிறது. ஆனால் கடைகள் கட்டடங்கள் புதிதாகவும், எங்களுக்கு வேண்டிய தண்ணீர் பீப்பாய் பீப்பாயாக தட்டில்லாமலும் கிராமந்தோறுமிருந்தது. குடிஜனங்களுக்குக் குறைவின்றி நடத்துவதன்றோ ராஜீய தர்மம்!"

"பிரஸவ காலத்தில் கல்லாத்தூர் எனும் கிராமத்துக்கருகில் ஒரு குளக்கரையில் ஒரு சாவடியில் வசித்து வந்தோம். கொஞ்ச நாளாய் சேர்த்து வைத்திருந்த பணத்தால் சாராயமும், கல்லாத்தூர் சேணிய முதலிமார்களிடமிருந்து சோற்றுக்காக கொஞ்சம் பிச்சை அரிசியும் வாங்க நான்மட்டும் தினந்தோறும் போய் வருவேன். பிரஸவமாயிற்று. பிறகு என் மனைவிக்கு ஜுரம் வந்துவிட்டது. நான் அவளை விட்டு அசைய முடியவில்லை. ஏனென்றால் அவளுக்கு சுயபுத்தியில்லை. ஜன்னியின் வேகம் பலமாயிருந்தது. அப்போதும் சாராயம் சாராயம் என்று அலறுவாள். வாங்கிக்கொடுக்காவிடில் ஒரேயடியாய்க் கூக்குரலிடுவாள். கொடுத்தால் அதற்குமேல் கூக்குரலிடுவாள். அந்த ஏழு, எட்டு நாளும் கண்ணில்லாத நான் பட்டபாட்டிற்கு அளவில்லை" என்று சொல்லும்போதே பிச்சைக்காரன் மயிர்க்கூச்சலிட்டு தோள்களைச்சிலிர்த்துத் தயங்கினான். நாங்களும் மௌனமாயிருந்தோம்.

"நல்ல வேளையாய் அந்த சாவடிக்குக் கொஞ்ச தூரத்திற்கப்பால் ஒருபள்ளர் சேரியிருந்தது. அவர்கள் நல்ல உதவி புரிந்தார்கள். ஒரு வைத்தியனை

அழைத்து வந்தார்கள். புருஷர்கள் அரிசி சாமாயம் முதலியவை வாங்கிக்கொண்டு வந்தார்கள். ஸ்திரீகள் கஞ்சி முதலியவை வைத்துக்கொடுத்து, நோயாளிக்குவேண்டிய உதவி புரிந்தும் வந்தனர். வந்தவைத்தியர், தாகமென்று தவிக்கும் அவளுக்கு, தண்ணீர் கொடுக்கவே கூடாதென்று தடுத்துவிட்டதாலும், அவள் சாருயம் என்றலறிக்கொண்டிருந்ததாலும், சாருயம், வேண்டிய வரையில் வீட்டில் புழக்கமாயிருந்தது. அதிக பேதையால், மயங்கிக்கிடக்கும் வேளைபோக மற்ற வேளைகளில் இரவும் பகலும், என் மனைவி, சதா புலம்பிக்கொண்டேயிருந்தாள். ஜன்னிக்கோளாரோ, சாருய வெறியோ, சுய ஞாபகமே கிடையவே கிடையாது."

"இப்படியிருக்க ஒருநாள் சாயங்காலம், சேரியில் அதே காலத்தில் பிரசவித்த ஒரு பள்ளர்பெண்ணின் குழந்தை, தொப்புள் கொடி அறுத்ததினாலுண்டான ரண இசிவினால் இறந்துவிட்டது. அதனால், ஒருவரும் என் சாவடிக்கு வரவில்லை. சுயபுத்தி இல்லாத என் மனைவி, தனக்காவது, பிறந்த சிசுவுக்காவது கெடுதல் வரும்படியாக ஒன்றும் செய்யாமலிருக்க வேண்டுமே என்னும் கவலை என்னை இறுக்கிக் கொண்டிருந்தது. நானொருவன். நான் எவ்வண்ணம் சகிக்கக்கூடும். எனக்குள்ள சாமர்த்தியத்தோடு குழந்தையை ஒரு கையால் பாதுகாத்து, மற்றொரு கையை, மனைவி மீது வைத்து, அவள் எழுந்திருக்காவண்ணம் தடுத்துக்கொண்டு, உட்கார்ந்திருந்தேன்.' மயங்கிக்

கிடந்த என் மனைவி திடீரென்று, "அடே பாவி! நீ பிச்சைக்காரன்தானேடா" என்ருள். எனக்கு பயம் அதிகரித்தது. யாராவது வரமாட்டார்களா வென்று கவனித்துக்கொண்டிருந்தேன்.

'அடே! கண் தான் குருடு, வாய்கூட ஊமை யாய்ப் போய்விட்டாயா' என்ருள் மறுபடியும்.

பேசாதிருந்தால் கோபமூண்டு என்னை உதறி விட்டுக் கிளம்பிவிடுவாளெனப் பயந்து 'ஆமாம்' என்றேன்.

'அடே! இந்தப் பிச்சைத் தொழில் உன் மட்டோடு நிற்கட்டும், குழந்தைக்கும் பிச்சைத்தொழில் வேண்டாம்—தெரியுமா,' என்றதட்டினுள். 'சரி, அப்படியே ஆகட்டும்' என்றேன் "என்ன இழுத் தாப்போல் சொல்லுகிருய்; சத்தியம் செய்யடா. கையில் அடியடா' என்று என் கையை இழுத்தாள். 'சத்தியம்' என்று கையிலடித்தேன். 'அடே குடிகாரப்பயலே!' என்று கடகடவென்று நகைத் தாள். பிறகு திடீரென்று, சிரிப்பையடக்கி 'ஏண்டா இப்படிக் குடித்துக் கெட்டுப் போகிருய். குடிப் பதை விட்டுவிடடா' என்ருள். 'சரி' என்றேன். "இன்ருடு விட்டுவிட்டேனென, சத்தியம் செய்து கையில் அடி" என்ருள், மறுபடியும் அப்படியே செய் தேன். இப்படி, அவள் பேசுவதைக்கண்டு நடுங்கி, யாராவது வரமாட்டார்களாவென்று வேண்டி, கவ னத்தை அதில் செலுத்தினவனுய், சத்தியம் செய்த

கையை அவள் கையிலேயே வைத்தபடி இருந்தேன் திடீரென என்னை மீறி "வண்டா குழந்தையைக் கொல்லுகிறாய்" என்றலறிக்கொண்டு எழுந்தாள்' அதைக்கேட்டவுடன், என்னமோ வென்று தெரியாமல் நான் இரு கையாலும், குழந்தையைத் தடவிப் பார்த்து, அதைக் காத்தபடியே, "குழந்தையை ஒருவரும் ஒன்றும் செய்யவில்லை. பேசாமல் தூங்கு". என்றேன். "ஒருவரும் ஒன்றும் செய்யவில்லையா! அடே பாவி! குளத்திலேயா என் குழந்தையைப் போடப் போகிறாய்! பாதகா!" என்றலறிக் கொண்டு கிளம்பி விட்டாள்.

பொறி கலங்கிப்போய் அந்தகனான நான், என் கைகளை அவள் குறல் வந்த பக்கமாய் நீட்டினேன். அவள் சீலை யகப்பட்டது. சீலையை உதறிவிட்டு வெளியே ஓடிவிட்டாள். பிரமித்துப் போய் இன்னது செய்வதெனத் தெரியாது சில நிமிஷங்களிருந்தேன். பிறகு, சிசுவையும் கையிலெடுத்துக்கொண்டு வெளியே வந்து, என் மனைவி பெயரைச் சொல்லி பலமுறை அழைத்தேன். எவ்வளவு கூப்பிட்டும் பதி லில்லாததாலும், குளத்தில் கொஞ்சம் சலசலப்பு என் காதில் பட்டதாலும், திகிலடைந்து, குளக்கரைக்குச் சென்றேன். அங்கே ஒரு சத்தமுமில்லை. நானோ குருடன். எனக்கு எதிரிலேயே, ஒரு பிணம் மிதந்தாலும் எனக்கு ஒன்றும் தெரியாது. கையிலிருக்கும் குழந்தையுடன் தண்ணீரில், அதிக தூரம், இறங்குவதற்குப் பயமயிருந்தது. குழந்தையைக் கரை

யில் போட்டுவிட்டு இறங்கவும் பயமாயிருந்தது. மனம் தடுமாறி நின்றேன். கடைசியில் "ஐயோ! ஐயோ!" என்றலறினேன்.

...பிடு தூரத்திலிருந்த பள்ளச்சேரியில் குழந்தை இறந்ததற்காகப் பெண்டுகள் அழுதுகொண்டிருந்ததால், என் குரல் அவர்களுக்கு எளிதில் எட்டவில்லை. சேரியின் பக்கமாய் போவோமென்று புறப்பட்டு, சப்பாத்திப் புதறில் விழுந்தேன். மெதுவாய் அதனின்றும் பின் வாங்கி அப்படி எத்தனித்தால் சிசுவுக்கும் ஆபத்து நேரிடுமென்று நின்ற இடத்திலேயே நின்று, தொண்டை கிழியக் கதறினேன். கடைசியில் சில பள்ளர் வந்து சேர்ந்தனர். விளக்கொடு சற்றுநேரம் தேடிய பின் "சேற்றில் சிக்கி இறந்து விட்டாள்" என்று சொல்லி என் மனைவியின் உடலைக் கரையிலெடுத்தெறிந்து, ஒரு துணியால் மூடினார்கள்."

வாக்கியத்தை முடிக்கும் அவனது நாவறண்டு நெஞ்சம் குமறிற்று. அங்கிருந்த எல்லார் கண்களும் கலங்கின, என் பெண் கண்களினின்றும் தாராளமாய் நீர் பெருகுவதை நான் கவனிப்பதைக் கண்டு அவள் புன்னகை பூண முயன்றது, நல்ல மழை பொழியும் போது, சில சமயம் இளஞ் சூரியனும் வெளிப்படுவது போலிருந்தது. வெகுநேரம் வரையில் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக்கொண்டு வாய் பேசாதிருந்தோம். பெருமூச் செறிந்து, என் மனைவி அவ்விடம் விட்டகன்றாள். சற்று நேரத்துக்கு மேல் எல்

லார் மனச் சங்கடத்தையும் தீர்க்கும் பொருட்டு 'பிறகு என்ன நடந்தது' என்றேன்.

'பிறகு என்ன இருக்கிறது; செவ்வையிழந்த பள்ளஸ்கிரி தாயையிழந்த என் சேய்க்கு பால் கொடுத்து வளர்த்தாள். அதுவே இந்தப் பெண். ஸாரஸ்வதி எனப்பெயரிட்டேன். இந்தக் குழந்தையின் நிமித்தம் நானும் அங்கேயே இருக்க வேண்டியிருந்தது. கல்லாத்தூர், ஆண்டி மடம் முதலிய ஊர்களிலிருந்த சேனியர்கள், என் நிலையை பரிதவித்து, என்னை ரக்ஷித்து வந்தார்கள். பெரிய யுத்தத்தால் வெளி நாட்டிலிருந்து நூல் தாராளமாய் வாராததால், தங்கள் வயிற்றை நிரப்புவதே, சேனியர்களுக்கு கஷ்டமாய் விட்டது. அதுவரையில் அங்கிருந்தேன். என் மனைவி கையிலெடுத்த சத்தியத்திற்குக் கட்டுப்பட்டு நானும் அன்றே முதல் குடியை ஒழித்தேன் மற்றொரு சத்தியத்தை நிறைவேற்றும் பொருட்டு, பணம் சேர்ப்பதற்காக இத்திருச்சி மாநகருக்கு வந்தேன். எல்லாம் கெட்ட எனக்கு, புத்தி பேதமானவிடம், கொடுத்த வாக்காயிருந்தபோதிலும், நம் வாக்கை சத்யமா யிருக்கவேண்டும், எனும், உணர்ச்சியிருந்தது' என முடித்தான்.

'அந்த உணர்ச்சி அநேக பெரிய மனிதர்களுக்கிருப்பதில்லையே!. அதிலும் முக்கியமாய் உங்களூர் தனிகாசலருக்கில்லையே' என கமலாம்பாளை நோக்கிச் சொன்னேன்.

'அது கிடக்கட்டும், இனி களுரைப்பற்றியே சிந்திப்பதில்லை என்றிருக்கிறேன். இவர் சத்தியத்தைக் காப்பாற்ற சேர்த்த பொருளனைத்தையும் காரியத்தை மறந்து என் திலகர் ஸவாராஜ்யநிதிக்குக் கொடுத்துவிட்டார். இனி என் செய்வார்' என்றாள் கமலாம்பாள்.

'அம்மணி, என் கதையைக்கேட்ட பின்பும் இத்தக் கேள்விகேட்கலாமா? எனக்கு ஆதிமுதல் வந்த கெடுதிகளெல்லாம் குடியால்வந்தன. எனக்கு முக்கியமாய் ஆபத்துக்காலத்தில் உதவினவர் பள்ளர். என்னை சம்ரக்ஷித்தவர் சேணியர். அவர்மேலும் என்னை கார்க்கமுடியாமல் போனது அவர்கள் தொழிலுக்கு வந்த இடைஞ்சலால். இங்கனமிருக்க குடியை ஒழிப்பதற்கும், பள்ளர் முதலியோரை கைதூக்கிவிடுவதற்கும், சேணியர் அன்னிய நாட்டு நூலையே எதிர்பார்த்து ஒரு காலத்தில் தவிக்காமலிருக்கும்படி கார்ப்பதற்கும், ஏற்பட்ட இந்தநிதிக்கு என் பணத்தைக்கொடுக்காவிடின், என்னைப்போல் நன்றிகெட்ட பாவி, உலகில் எவனுமில்லையென, என் வாலாற்றை யறிந்த எவனும் சொல்லமாட்டானு" என்று பதிலளித்தான் முருகேசமுதலி. 'சரி நான்வந்த காரியங்களைப் பார்த்து விட்டுப் போகிறேன், என்றாள் கமலாம்பாள். 'என்ன காரியங்கள்' எனக்கேட்டேன் 'முதல்முதலில் ராட்டினம் வேண்டும்' 'சரி, கொடுக்கிறேன். இன்னம் என்ன' என்றேன்.

'இரண்டாவது இந்த இனிய குரலுள்ள குழந்தைக்கு சங்கீதம் கற்றுக்கொடுக்கும் பாக்கியம்

எனக்குக் கிடைக்கவேண்டும்' என்றாள். முருகேசமுதலி பெண்ணை வைபவமாகக் கட்டிக்காட்டி. 'பழம் நழுவிப் பாலில் விழுந்ததுபோலாயிற்று,' என்றேன. கமலாம்பாள் கோரிய இரண்டு வேண்டுகோள்களும் பூர்த்தி யாயின. மாஹாத்மாவின் மனங்களிக்கும் காரியங்களை விடாது செய்து வருகிறீர்களா நீங்களும்?



# IV

## "பயனற்ற படிப்பு."

நான் முதல்முதலில் அவரை திருச்சியில் நடந்த தமிழ் மாகாணமகாநாட்டில் பார்த்தது. அப்போது அவர் திருச்சி கலாசாலையில் படித்துக்கொண்டிருந்ததோடு மகாநாட்டிற்கு வருவோரை சரிவர உபசரிக்கும் பொருட்டு, சேர்த்த இச்சாசேவகர்களில் ஒருவராயும் இருந்தார். அவர் பெயர் 'சிந்துராம அய்யர்'

'சிந்து' ராமஅய்யரென்றிருப்பதிலிருந்து, அவர், 'சிந்து' எனும்கவி பாடுவதல் புகழ்பெற்றவரென எண்ணிவிடக்கூடாது. அது அவருடைய குடும்பப் பெயரென்று சொல்லிக்கொள்ளுகிறார்கள். இதுபோல் தங்கள்பெயர்களுக்குமுன்னர், 'சிந்து', 'கிந்து' 'குந்து முதலிய—சிலசமயங்களில் பொருளே இல்லா த-மொழிகளைச்சேர்த்துக்கொள்வது, நம்முள் சிலஜாதியாருடைய வழக்கம். அதுபோலவே, 'சிந்து' ராமையருடைய சௌராஷ்டிரஜாதியிலும், அவ்வழக்கம் இருந்துவருகின்றது. வேறொன்றுமில்லை.

அவருடைய ஜாதியும்பெயரும், எனக்கு நன்றாய் ஞாபகத்திலிருப்பதின்காரணம் என்னவெனில் அந்த மகாநாடு கூடியகாலத்தில் நடந்த ஒரு சம்பவத்தால் தற்போதிருப்பதுபோல், நம்மவருள் அக்காலத்தில், அவ்வளவு ஒற்றுமை உணர்ச்சி ஏற்படவில்லை. ஒற்றுமையை வளர்க்கும் தேசீய மகாநாடுகளில், கூடும்

அதைப்பார்த்துவிடக்கூடாது. எல்லா ஆகாரத்திற்கும் இந்தவிதி ஏற்பட்டதில்லை. சில உணவுகள் உண்ணும் போதுதான் அந்த திருஷ்டிதோஷம் வந்து ஒட்டிக்கொள்ளுமாம். திருஷ்டாந்தமாக, பழம்முதலியவை, பலரும் பார்த்துக்கொண்டிருக்கையில் சீப்பு, சீப்பாய், உட்கொள்ளலாம். ஆனால் ஒருகவளம் அன்னம் உட்கொள்ளக்கூடாது! இதுபோன்றதேஸ்பரிதோஷமும் பட்சபாதம் பொருந்தியதே! மற்ற ஜாதியாரிடமிருந்து, தாகத்தாலிறந்தாலும், ஒருவாய் நல்லதண்ணீர், அருந்தக்கூடாது. ஆனால், குடம், குடமாய் கெட்டதண்ணீர் கலத்திருக்கும், மோராவது, பாலாவது, தாராளமாய் சாப்பிடலாம். நம்மவருள் 'பட்டினி' என்று சொல்லிக்கொண்டு, ஒரு அடுக்குதோசையும், ஒருதார் வாழைப்பழமும், ஒரு சொம்பு பாலும் குடிப்பதுபோல், இதெல்லாம் ஆசாரப்பூதஞ்சிகளாகும்! ஆதியில், திரிசங்கு தவித்ததுபோல், அந்த மகாநாடு காலத்தில், நம் சௌராஷ்டிர சகோதரரும், தவிக்கநேரிட்டது. கடைசியாய், வருணாசிரம வெறி கொண்டவர்களை ஒதுக்கி, நமது சௌராஷ்டிரர்களையும் வேண்டிக்கொண்டு, 'சிந்து' ராமையர்போன்ற சில இளங்கன்றுகளின் ஆசார சீர்திருத்த உற்சாக ஆவேசத்தை, சற்று அடக்கவே, மகாநாடு சச்சரவின்றி நடைபெற்றது. இந்த சம்பவத்தினால்தான், அவர்வந்தவுடன், ஞாபகத்தவறன்றி, 'வாருங்கள். சிந்துராமையர்' என்று வந்தவரைப்பெயரைச்சொல்லி வரவேற்று, 'இப்போது தான்வருகிறீர்களா' என்று வழக்கம்போல் கேட்டேன்.

'நான் இங்கு வந்து இரண்டு, மூன்று, நாட்களா கின்றன. இன்று ஒரு இடத்தில், திலகர் சரித்திரமென் னும், கதா காலக்ஷேபம் நடக்கிறது. அதற்குத்தங் களை அழைப்பதற்காக வந்தேன்.' என்றார்.

'அப்படியா? அவசியம் வருகின்றேன். காலக்ஷே பம் நடத்தும் பாகவதர் யாரோ? எனக்கேட்டேன். 'நான்தான்' என, நகைத்தபடி ராமையர் பதிலளிக்க 'ஆகா! இப்போது பாகவதராக, காலக்ஷேபங்கள், செய்து கொண்டா இருக்கிறீர்கள்' என்று நான் ஆச் சரியத்தோடு கேட்க 'ஆம். நல்லவேளையாய், கடவுள் எனக்கு இந்த வழியைக்காண்பித்தார். நான் இத் தொழிலுக்கு வந்த வரலாற்றைக்கேட்க வினோ தமாயிருக்கும், சாவகாசமிருப்பின் சொல்லுகிறேன்' என்றார் ராமையர்.

'சாவகாசத்திற்குக்குறைவில்லை. ஆனால் நான் இராட்டினத்தில் நூல்நூற்றுக்கொண்டே, தங்கள் சரித்திரத்தையும் கேட்பதற்கு, அனுமதி கொடுக்க வேண்டும்." என்று பதிலளித்து, அவரைத் தொ டங்கும்படி வேண்டினேன்.

"நான் இவ்வூர் கலாசாலையில் படித்து, 'பி. ஏ.' என்னும் பரீட்சைக்காகப் பணம் கட்டவிருந்தது தங்க ளுக்குத்தெரிந்திருக்கும். அக்காலத்தில் எனது தகப் பனார், 'சிந்து வெங்கடாசலம் செட்டியார்,' தலை கணக்கராயிருந்தார். நீங்கள் புன்னகை புரிவதின்

பொருள் எவர்க்குந்தெரியும், தகப்பனர் செட்டியாரெ
னும் பட்டத்துடனிருக்க, மகனாகிய நான், "ஐயர்,"
எனும் பட்டத்தை வகிக்கலானேனே, என, மனதிற்
குள் நகைக்கிறீர்கள்போலும். கிடக்கட்டும் உங்களை
நான் நன்றாய் அறிந்தவனாதலால், உங்கள் பரிகாசத்
தில், ஏளனக் கல்மிஷமில்லையென்றுணர்ந்து, அதை
பொருட்படுத்தாது விடுகிறேன் என்றார்," "அதற்காக
நான் புன்சிரிப்புக்கொள்ளவில்லை, நான் சிரித்ததின்
காரணம் வேறு. நம் ஊரில், தில்லைநாயகம்பிள்ளை
படித்துறை எனும் நதிக்கட்டடத்தில், "நியாயக்கட்சி
யாரைச்சேர்ந்தவர்கள்" என்று சொல்லிக்கொண்டு
திரியும், சில அநியாயக்காரர்கள், படித்தின பாட்டைக்
கண்டு, "ஜீபமான" பட்டம் வகித்தசிலர், 'பிள்ளை'
'முதலியார்' என மாற்றிக் கொள்ளலாமாவென்று
யோசித்துக் கொண்டிருக்கையில், அதற்கெதிரிடை
யான மாறுதலும் ஏற்பட்டதே, என, நகைத்தேன்.
உங்களைப் பரிஹாஸித்ததாக எண்ணக்கூடாது. மன்
னிக்கவேண்டும்" என்றேன்.

"அது எப்படியிருப்பினும் போகட்டும், அதைத்
தான் நான் பொருட்படுத்தவில்லை யென்றேனே.
நான் சொல்லியதுபோல், என் தகப்பனர் பெரியதனி
கராயிருந்தார், யுத்தகாலத்தில், முதலில், அவர் பொ
ருள் அதிகரித்து திடீரென்று "சாய சாமான்கள்"
விற்கும், ஒருகம்பெனியின் மோசத்தால், பெருத்த
நஷ்டமேற்பட்டு அவர் வெகுநாளாய்க் கஷ்டப்பட்டு
சேர்த்த சொத்து அனைத்தும் அடியோடு போய்விட்

டது. இப்பெருங் கஷ்டத்தால் அவர் மனமுடைந்து அவரும் உயிர்துறந்தார். மஹாத்மாவின் கட்டளையின்படி பள்ளியைவிடாத நான், அந்நியநாட்டு வியாபாரிகளின் சூழ்ச்சியால் விளைந்த தீங்குகளினால், பள்ளி பஹிஷ்காரஞ் செய்யலாயிற்று. பரீட்சைக்கு பணங்கட்டியிருந்த நானும், இந்த விபரீதங்களால் பெயிலடிக்கத் திறன் இன்றி வீட்டிற்குப்போக நேர்ந்தது. அங்கு சென்று கணக்குவழக்குகளைப் பார்த்ததில், கடன் ஆஸ்தியைவிட அதிகமாயிருக்க, சொத்துக்களையெல்லாம் விற்று, கடன்காரர்களை திருப்தி செய்து, பிழைப்புக்குவழி தேடலாயினேன். ஒரு தொழிலும் செய்ய முதலுமின்றி, என் பசையில்லா படிப்பினிமித்தம் திறனுமின்றி தவித்தேன். கடைசியில், வேறு மார்க்கமொன்றும் தோன்றாமல், சர்க்கார் ஊழியத்திலமர்வதைத்தவிர வேறு ஒருகதியுமில்லையென்று, கலெக்டர் ஆபீஸ் முதலிய இடங்களுக்கு மனு எழுதிப்போட ஆரம்பித்தேன். அப்போது தான், நமது தலைவர்கள், பயனற்றகல்வியென, தற்காலத்திய கல்விமுறையைப் பழித்ததின் உண்மையையுணர்ந்தேன். ஏனெனில், எங்குசென்றாலும், சுமார் இருபதுவருஷம் இக்கல்வி கற்பதில் கழித்த, எனக்கு, வருஷம் ஒன்றுக்கு, ஒருரூபாய் வீதம் இருபதுரூபாய் சம்பளம் கிடைப்பதுகூடக் கஷ்டமாயிருந்தது. நான் மனுப்போட்ட விடங்களெல்லாவற்றினின்றும், தற்போது எனது ஊழியம் தேவையில்லையெனும் பதிலே, தவறாது வந்துகொண்டிருந்தது. வேலையில் காலியேயில்லையாம், காலியெல்லாம் என்பெட்டியிலே

யும், வயிற்றிலேயும், குடிகொண்டுவிட்டது போலும். கடைசியில் இந்த 'இல்லைப்பாட்டின்' சூக்ஷமத்தை உணர்ந்தேன். ஒரு உத்தியோகஸ்தர் எனக்குப் பதிலளித்தபோது, "அரசாங்கத்தாரின் தற்காலத்திய நோக்கத்தின்பிரகாரம், உம்மை, தற்போது ஏற்பட்டிருக்கும் ஸ்தானத்தில் நியமிக்க இயலாது. ஏனெனில் ஏற்கனவே இந்த ஆபீஸில் "ஐயர்கள்" பெரும்பாலர்கள், இருக்கின்றனர்" என்று எழுதிவிலக்கினார். நான் அனுப்பிய மனுக்களில், 'சிந்துராமையர்' எனக் கையொப்பம் வைத்திருந்தேன்.

"இதன்பிறகு அனுப்பின மனுக்களில், 'ஐயர்' என்பதை நழுவவிட்டு 'சிந்துராமன்' எனக் கையொப்பங்கள் வைத்தனுப்பினேன். அப்படியனுப்பியும், உத்தியோகஸ்தர்கள் 'ஜாதி' என்ன, எனக் கேட்கத் துடங்கினர் நான். 'பிராமணஜாதி' என பதிலளிக்க, உடனே நமது சீட்டைக்கிழித்துவிடுவது வழக்கமாயிருந்தது. கடைசியில், அதிக சிபார்சுடன், ஒரு இடத்தில், டிவிஷன் ஆபீஸில் ஒரு குமாஸ்தாவேலை கிடைத்தது. எனக்குமேலதிகாரியாய் வாய்த்தவர், ஒரு "டிபுடி கலெக்டர்," எனும்பதவி வாய்ந்தவர். அவர் ஆதியில் நாடார்குலத்தைச் சேர்ந்தவர். அவருடைய தந்தை நல்ல செல்வவானானர். செல்வவானான அவருக்கு, ஏனைய ஹிந்துக்களாகிய, மேல்ஜாதியாரென்று சொல்லப்படுவர், தன்னைத்தீண்டாத ஜாதியானென ஒதுக்கிவைத்தும், கோவில் முதலியபொது இடங்களில் வரவொட்டாது தடுத்தனைத்தும் இன்

ளும் பலவிதமான, மானக்கேடான விளைவுகளிலாழ்த்தியதும், மிகவும் வருத்திற்று. அதுகாரணம்பற்றி, தன்குடும்பத்தோடு சமத்துவம் பாராட்டிவரும், கிறிஸ்துமதத்தில் சேர்ந்து, தனது மகனுக்கும் உயர்தரக் கல்வி கலாசாலைகளின் பயிற்சியும் கொடுத்தார். தனக்கு, ஜனசமூகத்தில் ஏற்பட்ட எல்லாக்கொடுமைகளும், பிராமணர்களால் தூண்டப்பெற்றவையென்றே எண்ணியிருந்த அவர், அந்த ஜாதியாரிடம் தீராதுவேஷங்கொண்டார். சிறுபிள்ளை முதல் அவர்மகனுக்கும், அதே துவேஷம், மனதில் குடிகொண்டது.

தற்போது, பெரியதானாக அதிகாரம் கிடைக்கவே, தான் ஹிந்துமதத்தையே விட்டுவிலகியபோதிலும் அந்த துவேஷத்தை மாற்றாமல், தன்னாலியன்றளவு, பாப்பானை இழிவுபடுத்தி வந்தார். அவர் சொற்களின் கொடுமை, என்னை வருத்தியதோடு கூட, நான் இருப்பதைக் கொஞ்சமேனும் சட்டை செய்யாது. வாயில்வந்ததையெல்லாம் பேசுவதைக் கேட்க, கேட்க, என்னை வேண்டுமென்றே சிறுமைப் படுத்துவதாயும் தோன்றிற்று. வெகுநாள்வரையில் எனது ஒருசாண் வயிற்றினிமித்தம் பொறுத்துவந்தேன். கடைசியில் எனது உத்தியோகக் கேடுகாலம் கிட்ட, எனது மேலதிகாரிக்குத் தக்கபடி புத்திகற்பிக்க வேண்டுமென்றெண்ணினேன்.”

“கடைசியில் ஒரு சந்தர்ப்பம் வாய்த்தது. ஒத்துழையாமை கட்சிக்காரர் செய்யும், பிரசாரத்திற்கு,

எதிர்பிரசாரம் செய்வதில், எங்கள் மேலதிகாரி முனைந்து வேலை செய்துவந்தார், பற்பல கிராமங்களில் கூட்டங்கள் கூட்டிவந்தார்."

"எந்த மேல்ஜாதியார், ஹிந்துமதத்திலிருந்த நாடாருடைய தகப்பனாரை, கிராமத்திற்குள்ளும், பொதுத் தெருக்களிலும், நுழையக்கூடாதெனத் தடுத்தாரோ, அவர்களே இப்போது, கிறிஸ்துமதத்திற் சேர்ந்த, 'டிபுடிகலெக்டர்' பதவியிலிருக்கும், அதிகாரியைத்தொட்டு, மாலையிட்டும், கௌரவப்படுத்தினார்கள். தென்னாட்டில் என்றுதான், நம்மவர், நம்மதத்தைச் சேர்ந்த சிலஜாதியாரை, இம்ஸித்து, அவர்களுள் நல்ல புத்திசாலிகளை, நம்மைவிட்டு விலகும்படியும், நம்மீது மாறாததுவேஷங் கொண்டவராயும், செய்யாதிருப்பாரோ தெரியவில்லை! அன்றுதான் நம் நாட்டிற்கும், நமது மதத்திற்கும் க்ஷேமம் பிறக்கும்.

"எனது அதிகாரியாயிருந்த, நாடார், ஒருகிராமத்திற்கு "ஜமாபந்திக்காகப்" போக நிச்சயித்து, அந்தக்காலத்திலேயே, அவ்வூரில், ஒருபெரிய இராஜவிசுவாசக்கூட்டமும் கூட்டவேண்டுமென, அவ்வூர் கணக்கருக்கு ஒரு உத்திரவு எழுதி, அந்தக்கூட்டத்திற்கு பெரிய கலெக்டர் துரையவர்கள் அக்கிராஸனம் வகிப்பதாகவும், தெரிவித்திருந்தார். பிறகு ஜில்லா அதிகாரியைக் கேட்டதில், அவர், மேலூர் கிராமத்தில் கூட்டத்தைக் கூட்டும்படி சொல்ல, நான் எழு

திய கடிதத்தைக் கிழித்தெறியாமலே, தாலூகா அதி காரி, இனி புதிதாய்க் கடிதம் எழுத அவகாசமில்லை யென்று தானே நேரில் அவ்வூருக்குச் சென்று ஏற் பாடுசெய்து கொள்ளலாமென்று இருந்துவிட்டார். நேரம் பார்த்திருந்த நான், அந்தக்கடிதத்தைத் தபா லில் போட்டுவிட்டேன். குறிப்பிட்ட நாளில் நாடார் கிராமத்திற்குச் சென்றார், அங்கு கணக்கருமில்லை, வேறு கிராம அதிகாரிகளில் ஒருவருமில்லை. எல் லோரும், நாற்பது மைலுக்கப்பாலுள்ள ஊருக்கு அவ் வூர் கணக்கர் சொல்படிக்கு, ராஜவிசுவாசக் கூட்டத் திற்காகப் போய்விட்டார்கள். இதுவிஷயந்தெரியாத, தாலூகா அதிகாரி, ஆத்திரத்துடன் காத்திருந்தார். சாப்பாடுமுதலிய சௌகரியங்கள் சரியாகக் கிடைக் காத கோட்டம் ஒருபக்கம், பெரிய கலெக்டரை வரச் சொல்லியிருக்கிறோமே, அவர் வந்துவிட்டு இங் கொருவருமில்லாததைக்கண்டு, என்னசொல்லுவா ரோ என்னும் பயம் மறுபக்கம். கிராமவாசிகளில் சிலரி டம் கூட்டங்கூடுவதற்கு, ஏற்பாடுசெய்யச் சொன் னார். அவர்கள் அரையணாவுடன், தமுக்குப்போடச் சொல்லுகிறோம், என்றார்கள். தமுக்குப்போடுவ தற்கு, வெட்டியான்கூட அங்கே இல்லை. எல்லோ ரும், மாலையும் கையுமாக, நாற்பது மைலுக்கப்பால், அதிகாரிகளின் வரவை எதிர்ப்பார்த்துக் காத்தி ருந்தனர்.

பெரிய கலெக்டரும் தனதுமோட்டார்வண்டி யில் வந்து சேர்ந்தார். அந்த ஒரு வத்பாடுமில்லாத

தைப்பார்த்து 'ஏன்? ஏற்பாடு ஒன்றையுங் காணோம்' என்றார்.

"கிராம அதிகாரிகளை அழைத்துவரச் சொல்லி யிருக்கிறேன். இதோ கொஞ்சநேரத்திற்குள் வந்து விடுவார்கள். வெகுசீக்கிரத்தில் சகல ஏற்பாடுகளும் முடித்துவிடுகிறேன்." என்று சொல்லி, என்னை அழைத்து "கணக்கரைப் பார்த்துவா" என்றார்.

நானும் சென்று சாவகாசமாய் வந்தேன். அதற்குள், காத்துக்கொண்டிருந்த துரைக்குக் கோபம் வர ஆரம்பித்தது. தாலூகா அதிகாரி கையைப் பிசைந்துகொண்டிருந்தார். நான் திரும்பவந்து, கணக்கர் ஊரிலில்லையென்றும், எல்லா கிராம அதிகாரிகளும், நாற்பது மைலுக்கப்பாலிருக்கும் கிராமத்தில், மேளதாளத்துடன், அதிகாரிகளை வரவேற்கக் காத்துக்கொண்டிருப்பதாயுந் தெரிவித்தேன்.

"அடடா! அங்கே கூட்டங்கூடுவதாயிருந்ததை மாற்றிவிட்டோமே, யார் அவர்களுக்கு உத்திரவளித்தது" என என்னை நாடார்கேட்டார். "தாங்கள்தானே கடிதம் எழுதினீர்கள்" என்றேன். "அதை நான் அனுப்பவில்லையே யார் அதை அனுப்பினார்கள்" எனக்கேட்டார்.

"தங்கள் மேசையில் கடிதம் வைத்திருக்க, அதை அனுப்புவதற்காக வைத்திருக்கிறீர்களென்றெண்ணி, நான்தான் அனுப்பினேன்" என்று ஒன்று

பரிதாபகரம் போல் சொன்னேன். உடனே என்னைக் கோபிக்கத் தொடங்கினார். நாங்கள் பேசிக்கொண்டிருப்பதைப் பார்த்து “என்ன விசேஷம்” என துரை விசாரித்தார். விஷயத்தை நாடார் விளக்கினார்.

‘அந்த கிராமத்திற்குப் போகமுடியுமா? நம்முடைய காரில் ஏறிக்கொண்டு போவோம்’, எனக் கலெக்டர் கேட்க ‘போகலாம் நல்ல பாதையிருக்கிறது’ என்று நான் சொல்ல, நாங்கள் மூவரும் புறப்பட்டு, ஒரு சாலைவழியாய், இருபது மைலுக்குமேல் போனோம். அங்கே, உளையில் மோட்டார் வண்டி சிக்கிக்கொண்டு, சேற்றிலிருந்து அதை இழுப்பதற்கு இரவு பத்துமணிக்கு மேலாகிவிட்டது.

“கலெக்டர் துரைவாயிலின்று அன்று புறப்பட்ட வார்த்தைகளால்தான், இங்கிலீஷ் பாஷையிலும், இவ்வளவு கோபமேற்படுத்தும் சொற்கள் இருக்குமென்று உணர்ந்தேன். கடைசியில் நாங்கள், ஒருகிராமத்திற்குப் போய்ச் சேர்ந்தவுடன், மனங்கசிந்து, துரை அவர்கள் நாடாரை நோக்கி, “இவ்வளவு ஜனங்களுங் கண்டு நகைக்கும்படி, என்னை ஏமாளியாக்கினீர்களே” என்றார்.

“நான் ஒன்றுஞ்செய்யவில்லை துரைகளே,” என்று அவருக்கு பதிலளித்து, என்னைக்கண்டு பல்லைக்கடித்துக்கொண்டு, “நீயல்லவா, எங்களிருவர்களையும் ஏமாளர்களாக்கினாய்” என்று சினந்தார்.

"அது என்செயலல்ல, ஈசுவரன் ஆக்ஞை, அங்கனம் நேர்ந்தது" என்று நான் பதிலளித்தேன். பின்னர், கூட்டங்கூடிய கிராமத்தில், அதிகாரிகள், வராததால், அங்கிருந்த சில ஒத்துழையாமை கட்சிக்காரர், அந்த சந்தர்ப்பத்தைக் கைப்பற்றி, அன்று ஒரு பெரிய பிரசங்கம் செய்தார்களெனக் கேள்விப்பட, என்மேலதிகாரிக்கு வந்த கோபம் இவ்வளவவ்வளவல்ல.

"இனி மறுமுறை சர்க்கார் உத்தியோகம் உனக்குக் கிடைக்குமென, கனவிலும் நினையாதே" எனக் கடிந்தார்.

"இனி இந்த ஊழிய சேவகத்திற்கு வருவதாய் எனக்கும் உத்தேசமில்லை" என்று சொல்லிவிட்டு வந்துவிட்டேன்.

ஏதோ நான்செய்த புண்ணியத்தால், எனக்குச் சங்கீதத்தில் கொஞ்சம் தேர்ச்சியிருந்தது. எனது உறவினர், ஒரு பாகவதர், என்னைப் பின்பாட்டுக்காக வைத்துக்கொண்டார். எனக்கு மாதத்திற்கு சுமார் ரூபாய் நாற்பதுக்குக் குறையாமல் வந்துகொண்டிருந்தது. ஒருவருஷத்திற்குப் பின்னர், நானே பாகவதராகிவிட்டேன். தற்போது, கடவுள் கிருபையால் ஒரு குறைவுமில்லை, கொஞ்சம் சொத்தும் சேர்த்துவிட்டேன். இனி எனக்கேதேனும் ஆபத்து நேரிடினும்குடும்பத்தைப்பற்றிக் கவலையில்லை. இருபது

வாருஷம் படித்த படிப்பால், பாரென்றும் காணாத நான், ஒருவருஷம் பயின்றவித்தையால் சுகப்படுகிறேன். மேலும் நம் ஜாதியாரைத் தினம் திட்டுவதைக்கேட்கும் அவஸ்தையும் தப்போகில்லை" என முடித்தார்.

பின்னர் லோகமானிய திலகர் சரித்திர காலக்ஷேபத்தைக்கேட்க எல்லோரும் புறப்பட்டெழுந்தோம்.



# V

# பிச்சைக்கோனார்.

"நேரே போலீஸ் கச்சேரிக்குத்தான் போக வேண்டும்" என்றார் ஒருவர்.

"இதென்ன! அநியாயமாயிருக்கிறதே" என்றான் மற்றொருவன்.

இப்படியாக அங்கிருந்த பலரும் தங்களுக்குத் தோன்றியபடியெல்லாம் கேட்போரின்றி ஒரேகாலத்தில் தங்கள் ஆத்திரத்தை வெளியிட்டார்கள். ஆனால் பலத்த அடி விழுந்தது எனக்கே.

நடந்த விஷயமென்னவென்றால், திருச்சி நகரில் "ஞாயக்கக்ஷியாருடைய கிளர்ச்சி புதிதாய் ஆரம்பித்தது. அந்த கக்ஷியாரைச்சேர்ந்த சிலர் தங்கள் நியாயமான கக்ஷியை நிலை நிறுத்தும்பொருட்டும், "ஞாயம்" என்பது இன்னதென விளக்கிக்காட்டும் பொருட்டும் அந்தக் கக்ஷிக்கு எதிரிடையாய் சுய ஆக்ஷியைப்பற்றி, யார் சிலாகித்துப் பேசினாலும், அவர்களைக் கல்லாலும் மண்ணாலும் அடிப்பதெனக் கிளம்பினார்கள். அன்று பெரியசவுக்கில் நடந்த ஒரு கூட்டத்தில், நியாயவாதிகளால் எறியப்பட்ட கல் என் கண்ணில் அநியாயமாய்த் தாக்கிற்று. உடனே சச்சரவு அதிகமேற்பட்டு, கூட்டம் மேற்கூறியவண்ணம் கலைந்தது.

"இனியாகிலும், இந்த "ஜய ஆஹுதி" பிரசங்கங்களை விட்டு ஒழிப்பார்களா?" என்று பெருமையாய்ப் பேசினார் பிச்சைக்கோனார். "தாங்கள்தான் அல்லவா இருந்ததோ" என்று நான் கேட்க, "ஆம்" 'அவன்தான்' 'நான் நேரில் பார்த்தேன்' என்று பலர் கூக்குரலிட ஆரம்பித்தனர். சிலர் 'இன்றோடு ஜய ஆஹுதி கிளர்ச்சி ஒழிந்தது' என்றும் கொக்கரித்தனர். ஒரு கேள்விக்குப் பதில் அளிக்கும் தருவாயில் பிச்சைக்கோனாரிடம் யாரோ காதில் ரகசியமாய், ஏதோ சொல்ல, அவர் பரபரப்புடன், உடனே அங்கிருந்து புறப்பட்டார். அவர் சென்றபின், போர்க்களங்களில் தங்கள் வயிறு வளர்க்கும்பொருட்டு வட்டமிட்டுக்கொண்டிருக்கும் கழுகுபோல், அங்கு காத்திருந்த போலீஸ் உத்தியோகஸ்தரும் 'நீங்கள் தங்களுக்கு பலத்த அடி விழுந்ததென ஒரு வாக்குமூலம் கொடுங்கள். யாராவது 4 பேரைப்பிடித்து விசாரணைக்குக் கொண்டுவருகிறேன். 'அப்படி செய்தால்தான் இந்த சச்சரவுகள் தீரும்போலிருக்கிறது' என்று கூறி, தனது டஸ்தகத்தையும் பேனாவையும் நீட்டினார். அவரைக் கும்பிட்டு 'ஐயனே! எங்கள் விவகாரங்களை நாங்களே தீர்த்துக்கொள்ளுகிறோம்' என்றேன்.

'உங்கள் நன்மைக்குத்தான் சொன்னேன். இப்படி சச்சரவுகள் தொடர்ந்து கற்கள் எறியப்பட்டு வந்தால் உங்களுடைய கிளர்ச்சிக்குப் பங்கம் ஏற்படும்' என்று

'உலகெல்லாம் ஜெயித்த, பலத்த அரசாங்கத்தாரின் குண்டுகள் முதலியவற்றிற்கே அடங்காத கிளர்ச்சியா, இச்சிறு கற்களால் அடங்கிவிடும்! புருஷநுக்கு பிறப்புரிமையாயிருக்கும் சுய ஆக்ஷிப்போர் வரவர, வலுத்துக்கொண்டே போகும். ஆண்மையுள்ள ஒரு தேசபக்தனிருந்தாலும் அது கலோக்காது.' என்று சொல்லி, அங்கிருப்போர் ஆத்திரத்தையும் அடக்கி, வீடுபோய்ச சேர்ந்து, கண்ணுக்கு சிகிச்சை செய்துகொண்டிருந்தேன்.

என்னைச்சுற்றி சிலமுக்கிய நண்பர்களிருந்தார்கள். அவர்கள் 'இவ்வளவுக்கும் முக்கிய ஆதாரம் அந்த பிச்சைக்கோனுன், அவனை அடக்கிவிட்டால் எல்லாம் அடங்கிவிடும்' என்றும் 'இதைப்பற்றி கட்டாயமாய் ஏதாவது முயற்சி எடுக்கவேண்டும்' என்றும் பேசிக்கொண்டிருந்தனர். அப்போதே பிச்சைக்கோனுரும் அங்குவந்தார். வெட்கியமுகத்தோடு 'தங்களிடம்தான் வந்தேன், என்னோடு தாங்கள் உடனே வரவேண்டும் வண்டியும் கொண்டுவந்திருக்கிறேன்' என்றார்.

'என்ன விசேஷம்' எனக்கேட்டேன்.

'நம்மிருவருககும் நண்பரான மரக்கடை அமிர் தம்பிள்ளை, அத்தியாவஸ்தையில் சாகுந்தருவாயில் இருக்கிறார். தங்களை கையோடு அழைத்துவரச் சொன்னார்' என்றார்.

'நான் அவரை நேற்று காலையில் பார்த்தேன் சவுக்கியமாயிருந்தாரே.' என்றேன்.

'நான்கூட இரண்டு நாளைக்குமுன் கண்டேன் ஒரு குறையுமின்றி இருந்தாரே' என ஒரு நண்பரும் சொன்னார்.

'ஒருவேளை, தங்களை, இவ்வண்ணம் சொல்லி அழைத்துப்போய், கல்லாலடித்தது போதாதென்று மேற்கொண்டு——' என மற்றொருவர் ஆரம்பித்தார்.

'சுவாமி! அப்படியொன்றுமில்லை நான் சொன்னது சத்தியம் புறப்படுங்கள்' என, கோனார் மறுதளிக்க.

'இதோ வருகிறேன்' எனக்கிளம்பினேன்.

'போவதானால், தனியாய் போகவேண்டாம். நாங்கள் யாராவது கூடவருகிறோம்' என்றார், சங்கேதந்தெரியாத எனது நண்பர்.

'வேண்டாம், வேண்டாம், எனது சரீரத்தை நானே காத்துக்கொள்வேன்' என்று சொல்லி, கோனாரோடு சென்றேன்.

'போகும் வழியில், பிச்சைக்கோனார் மிகுந்த மனவுருக்கத்துடன் 'சுவாமி! என்மீது குற்றஞ் சாட்டி என்னை போலீஸ் விசாரணைக்கிழுக்க தாங்கள், மறுதளித்தீர்களென்று கேள்வியுற்றேன். இன்று கல்லெறிந்தது நான்தான். இனி இது பாதிரி

ஒன்றும் செய்வதில்லை, என்று தங்களுக்கு சத்தியம் செய்து கொடுப்பதோடு, வேறுயாராகிலும் எறியாமலும் பார்த்துக்கொள்கிறேன்,'' என, பிச்சைக் கோனார் போன்றவர்களின் சுபாவத்தை நன்கு அறிந்த நான், இது அதிகாரிகளால் வாங்கப்படும் ஜாமீன் பத்திரங்களைவிட உறுதியுள்ளதென உணர்ந்து, 'எதுவும் நன்மைக்கேதான் வருகிறது' எனும் உண்மையை இதிலிருந்தே அறிந்து கொள்ளலாம். 'இன்றைக்கு ஒரு அடிவிழுந்ததின் நிமித்தம் நம்முடைய நகரத்தின் நற் பெயரையே கெடுத்து வந்த தீய சச்சரவுகள் ஒழிந்ததைப்பற்றி எனக்கு மிக்க சந்தோஷம்' என்றேன்.

அமிர்தம்பிள்ளை வீடு வந்து சேர்ந்தோம். அதிக கலாசாலைப் படிப்பில்லாமலும், தேசியக் கக்ஷிகள் ஒன்றிலும் சேராதவராயும் அதிக சொத்து இல்லாதவராயும் இருப்பவர்களுள் அமிர்தம் பிள்ளையைப் போல் செல்வாக்குள்ளவராயும், பொதுஜனங்களால் அபிமானிக்கப் பட்டவராயும் உள்ளவரை நான் பார்த்ததேயில்லை. இதற்கு முக்கிய காரணம் அவருடைய தயாளத்துவமும், தந்நல மறுப்பும், மாறா மந்தஹாஸமுமே. அவருக்கு ஊரில் ஒருவரும் விரோதி இல்லை. ஆனால் தானே தனக்கு சத்துருவாயிருந்தார். ஏனெனில் அவர் மதுபானத்திலாழ்ந்தவர். மதுபானத்தால் அவருக்கு பல போலி நண்பர்களும் ஏற்பட்டிருந்தனர். இத்தகைய நண்பர்களின் இயல்பு யாவரும் அறியக்கூடியதே. அவரிடமிருந்து பற்றிக்கொள்வ

தில் கூசாது பற்றுவார்கள். அவருக்கு ஆபத்து நேரிடுங்காலத்து முழுதும் கப்பலைவிட்டு எலிகள் ஓடுவதுபோல, திரும்பிப்பாராமல் ஓடிவிடுவார்கள். வெகு நாளாய்த் தனது மதுபானக் கொண்டாட்டங்களாலும் தன் போலி நண்பர்களின் விடாமுயற்சியாலும், தான் சம்பாதித்த ஏராளமான பொருளையும் செலவிட்டு பெருத்த கடனாளியாகவும் தற்போது ஆய்விட்டார். அவருக்கு குடும்பம் பெரிது. அவர்களிடத்தும் சகோதர வாஞ்சை பாராட்டி வந்தவர் தன் பத்தினி மக்களிடம் அத்தியந்த பிரியம் வைத்திருந்தார் என்பதில் ஆச்சரியமன்று. கடன் அதிகமாக ஏறவே அவருக்கு கவலை அதிகரித்தது. கவலையை மறக்கடிப்பதற்காக, முன்னிலும் அதிகமாய் மதுபானத்தில் மூழ்கிறார். குடி அதிகரிக்கவே தொழிலின் [illegible]தியமும் குன்றி அதனால் கவலையும் பதின்மடங்கு அதிகரித்தது இப்படியாகவே, குடியால் கவலையும் பின்னர் கவலையால் குடியும், மீளவும் குடியால் கவலையும், மாறி மாறி, ஒன்றுக்கொன்று உதவியாய், இந்த சுழலின் சூழ்ச்சியில் சிக்கினவர் பலர் பெருஞ்சுழலில் அகப்பட்ட துரும்பைப்போல் வெளியேற திறனற்று கடைசியில் ஆழ்குவதை நாம் அனேகரும் கண்டு வந்திருக்கிறோம்.

தற்போது ஆபிரகம் பிள்ளை அவர்களும், இந்த சுழலில் சிக்கி, அதிக மதுவின் உபயோகத்தால், வயிறு குடலெல்லாம் புண்ணாகி, இறக்கும் தறுவாயில்

இருந்தார். அன்புடன் செல்வமாய் வளர்ந்து வந்த தன் மனைவி மக்களை ஆதரவின்றி, அற்ப ஜீவனத்திற்கும் பொருளின்றி செய்து விட்டோமே எனும் கவலையும் அவர் மனதை கவர்ந்து கொண்டிருந்தது. புண்பட்டு, திராணியற்று வருந்தும் தேகத்தை ஈக்கள் மொய்ப்பதுபோல கடன்காரர்களும் அவரிடமிருந்து பெற்ற உதவிகளையெல்லாம் மறந்து, தற்போது அவரை துன்புறுத்த முனை வந்தனர். கடன் எல்லாவற்றையும் ஒரு நண்பர் உதவியால், ஒரேயடியாய் தீர்த்துவிடலாமென்று இது காறும் நம்பியிருந்த அமிர்தம்பிள்ளைக்கு, தன் நண்பரிடமிருந்து உதவி எதிர்பார்ப்பது வீண் என, புலப்பட்டு விட்டது. மதுபானத்தின் மேல் இச்சை வைத்தாருக்கு அதைத் தவிற வேறு கதியில்லை என்பது உண்மையாயிற்று. மேலும், 'மதுபானர்கட்டு மரணம் மட்டும் நிலைக்கும்' என்பதின் கருத்து மதுபானமே ஒருவனை மரணம் வரை கொண்டுசேர்க்கும் என்பதற்கு அடையாளமாய் அமிர்தம் பிள்ளையையும் உபாதியில் வீழ்த்திற்று.

நாங்கள் உள்ளே சென்று மனைவிமக்கள் அருகில் கண்ணும் கண்ணீருமாய் சூழ்ந்து நிற்க, அதற்கப்பால் போலி நண்பர்களும் கடன்காரர்களும கைகளைப் பிசைந்து நிற்க மரணாவஸ்தையில் இளம்பிராயத்தில் தவிக்கும் என் நண்பரைக்கண்டவுடன், அவரது நிலைமையை நான் உணர்ந்துகொண்டு திகைத்து நின்றேன். அப்போது தான் எனது நண்பர் கிரிஸ்தவராகையால் அவருக்கு அந்தியகாலத்தில் அவர்களுக்குள் விதித்த

விதிப்பிரகாரம் அவர்களுடைய பாதிரி ஒருவர் 'அவஸ்தை கொடுக்கிறது' என்றும் சடங்கை முடித்து வாடிய முகத்தோடு வெளியேறினர்.

“என் வயிற்றிற்குள், ஆயிரம் நாய்களும் நரிகளும் புகுந்துகொண்டு, என் குடலைப்பிடுங்கித்தின்று கொண்டிருக்கின்றன” என்று அலறினர். அங்கு வட்டிக்கணக்குகளுடன் வந்திருந்த கடன்காரரின் கண்களை கலங்கின. அங்ஙனமிருக்க அவரிடம் அன்புபாராட்டியமற்றவர் மனைநிலையைப்பற்றி கூற வாயொணா. அவருக்கு கஷ்டத்தையாவது சற்று குறைக்கலாமென்று அருகிற் சென்றேன். என்னைக் கண்டவுடன், அங்கிருந்த மற்றவரை வெளியே போகும்படி ஜாடை செய்து, என்னையும், என்னை அழைத்து வந்த பிச்சைக்கோனாரையும், தன் மனைவியையும் மட்டும் அருகிலழைத்து, “சுவாமீ! என் நிலையை ஒளியாது அறிவிக்கவேண்டும். நான் இதிலிருந்து மீண்டு எழுவதாக எனக்கு புலப்படவில்லை”, என்று கேட்டார்.

“நிலைமை அபாயகரமானது தான்—ஆனாலும்” என்றேன்.

“ஸ்வாமீ! போதும். வைத்தியர் நோயாளிகளிடம் உண்மை உரைக்க மனம்கூசுவார்கள், எனக்கு வேறு வருத்தமில்லை. தங்களைப்போலொத்த நற்சகவாசம் எனக்கு முதலில் கிடைக்காது, அந்தி காலத்

தில். நான் மீள முடியாத காலத்தில் கிடைத்ததே என்றே வருந்துகிறேன்" எனக்கண்ணீர் விட்டார்.

"அதைப்பற்றி வீணில் வருந்துவானேன்" என்றேன்.

"அப்படியல்ல ஸ்வாமீ! நான் மரணத்திற்காக அஞ்சியவனல்ல. இன்றில்லாவிடின் என்றைக்காவது ஒருநாள் இறப்பது திண்ணமென்று துணிந்தவன். என்னிடம் அன்புபாராட்டியவரை துன்பத்திற்காளாக்கியும், எனக்குண்மையாய் உதவி புரிந்தோருக்கு பதிலுபகாரம் செய்யாமலும், என்னை நம்பினோரை வஞ்சித்தும், போகிறேனே, என்றுதான் வருந்துகிறேன்" என ஈன தொனியுடன் கூறியது, எங்கள் மன முருகச்செய்தது.

"அப்படியொன்று மில்லையே" என்றேன் ஆறுதலுக்காக.

"இல்லையா! கேளுங்கள். செல்வமாய் வளர்ந்த என் மனைவி மக்கள் நாளை முதல், வயிறு வளர்ப்பதே கடினம். எனது போலி நண்பர்களுக்கு ஏராளமாய் பொருளுதவி செய்த நான், தங்களைப்போல் எனக்கு பன்முறை உதவி செய்தவருக்கு பதிலுபகாரம் செய்ய சக்தியற்றவனாயிருப்பது வருந்தத்தக்கதாயிருக்கிறது. தவிற என்னை நம்பி கடன் கொடுத்தவர்கள் எவ்விதமாய் என்னை ஏசுவார்களோவென நினைத்தால் உடல் நடுங்குகிறது".

"வீணில் மனம் நொந்து கொள்ளாதீர்கள் உண்மையாய் உங்களிடம் அன்புவைத்தவர்கள் உங்களிடமிருந்து உதவி பெறாவிடின் வருந்தார்கள். மேலும் உங்கள் ஆயுள் முழுதும் நீங்கள் பிறருக்கே உதவி புரிந்து வந்தீர்கள். உங்களுக்குக்கடன் கொடுத்தவர்கள் தாங்கள் கொடுத்த தொகைக்கு மேல் வட்டியிலும், உதவியிலும், உங்களிடமிருந்து பெற்றிருக்கிறார்கள்".

"அந்தோ! ஒரு வாரத்திற்கு முன்புதானே தங்களிடமிருந்து மரண பண்டுக்கு சந்தா கட்டவேண்டுமென்று ரூபாய் நூறு வாங்கினேன். அதைக்கூடவல்லவா பாழும் குடியிலே துலைத்துவிட்டேன். அதையாவது, தேதி தவறாமல் கட்டியிருந்தேனானல் இப்போது மனைவி மக்களைப்பற்றியாவது கவலையற்றிருக்கலாம். நான் இறந்தவுடன் ரூபாய் பதினாயிரம் கிடைக்கும் இப்போதோ—!'

"வருந்தவேண்டாம் தங்களைக்கண்ட மறுநாள், நான் தற்செயலாய், மரணபண்டு காரியதரிசியைக் காண உங்கள் சந்தாதுகை வந்ததாவெனக் கேட்டேன். வரவில்லையென்றும், அன்றே கட்டாவிடில், கெடுதீர்ந்து போகுமென்றும் அவர்சொல்ல, உடனே நானே அதைக்கட்டிவிட்டேன். ஆகையால் பெண்டுபிள்ளைகளைப்பற்றி கவலை வேண்டாம்." என்று சொல்லி மரணபண்டு பத்திரத்தை எடுத்துவரச் சொன்னேன்.

" பதினுயிரம் வந்தால் பயனென்ன, கடனே முப்பதினுயிரத்துக்கு மேலிருக்குமே! வட்டி வட்டிக்குவட்டி, என்றல்லவா சுமத்திவிடுகிருர்கள் பாவிகள்' என்று முணு முணுத்தார் பிச்சைக்கோனர்.

'மரணபண்டுத் தொகையை கடன்காரர் கைப்பற்ற முடியாது'

'ஆயினும் கடன்ரணம் உதவாது; சுவாமீ' என்ருர் அமிர்தம் பிள்ளை.

'இதைப்பற்றியெல்லாம் வீண் கவலைப்பட வேண்டாம் கடன்காரருக்கு மனம் நோகாமலும், குழந்தை குட்டிகள் தவிக்காமலும் ஏதாவது ஏற்பாடுசெய்யலாம், தங்கள் கடன் காரரில் சிலர்உண்மை நண்பர்கள். அவர்களாகவே குறைந்த தொகையை வாங்கிக்கொண்டு கடனைத்தீர்த்துவிடுவார்கள்' என்று நான் தேறுதல் சொல்லி மரண பண்டு பத்திரத்தை அவர் மனைவி பெயருக்குச்சாட்டி கையொப்பம் வாங்கினேன்.

'என்னிடம் உள்ளன்புகாட்டிய நீங்களே என் மனைவி மக்களுக்கு ஆபத்துக் காலங்களில் உதவி, அவர்களை ஆதரித்து வரவேண்டும். மற்றொருவிஷயம்; சுய ஆட்சி கக்ஷி நியாயகட்சி, என்றெல்லாம், கட்சியாடி வீணில் சண்டையிட்டுக் கொள்ளாதீர்கள். நான் வருந்துவதுபோல் உலகத்தில் மற்றெவனும் வருந்தாது காக்க இந்த மதுபானம் எனும் பேயை

ஒழிப்பதில் உங்கள் ஊக்கத்தைக் காட்டுங்கள். தங்களுடன் பேசிய பின்னர், எனக்கு ஒருவித அமைதி உண்டாயிருக்கிறது. மதுபானத்தை நாட்டைவிட்டுத் துரத்துங்கள். குடியை ஒழியுங்கள். குடிமக்களைக் காருங்கள். குடியை ஒழியுங்கள்! குடியை ஒழியுங்கள்!!' என்றலறிக் கொண்டே உயிர் துறந்தார்.

இதன்பிறகு நமது நகரில் சச்சரவின்றி பொதுக் கூட்டங்கள் நடைபெற்று வந்ததும், அன்றுமுதல் என்னிடம் நட்புபாராட்டி வந்த பிச்சைக்கோனார், எவ்வளவு உதவியாயிருந்து வந்தாரென்பதும், நாளடைவில் அவரும் நம்மோடு சேர்ந்து உழைக்க ஆரம்பித்தாரென்பதும், திருச்சிவாசிகளுக்குத் தெரிந்த விஷயம். ஆனால் கோனார் நம்முடன் எங்ஙனம் சேர்ந்து, தேசசேவையில் ஈடுபட ஆரம்பித்தாரென்பதை விளக்க வேண்டும்.

அமிர்தம் பிள்ளை, இறந்ததின் நிமித்தம், அவருடைய குடும்ப விஷயத்திலிருக்கும், விவகாரங்களைத் தீர்ப்பதற்காக, அடிக்கடி அவரும் நானும், சந்திக்கலாயிற்று. அநேகநாள் எனக்காக, என் வரவை எதிர்பார்த்து, என் வீட்டில் காத்திருக்கும்படி நேரிட்டதால், அங்கிருக்கும் 'தமிழ்நாடு' 'நவசக்தி' முதலிய பத்திரிகைகளை அவர் படிக்கும்படி நேரிட்டது. இவ்விதமே உதித்த பழக்கத்தால், அதன்பிறகும் பத்திரிகைகள் படிக்கவும், காங்கிரஸ் வர்த்தமானங்களை

அறியவும், அவருக்கு அவா உண்டாயிற்று. பின்னர் மகாத்மா காந்தியின் சுற்றுப்பிரயாணம், முதலிய உற்சாக சம்பவங்களும் நேர்ந்தன. இதுவரையிலும், நமது தேசீய முன்னேற்ற முயற்சிகளில் ஈடுபடாத பிச்சைகோனூர், ஒருநாள் என்னிடம்வந்து, 'சுவாமி! நமது நாட்டிலே, பற்பலவிடங்களில், மதுவிலக்கு பிரசாரம் தீவிரமாய் நடப்பதாய், தினம் 'சுதேசமித்திரன்' பத்திரிகை வாயிலாய் தெரியவருகிறதே. ஏன் நம்முடைய ஊரிலும் அதுபோல் கிளர்ச்சி செய்யக்கூடாது, எனக்கேட்டார்.

'உங்களைப்போன்றவர்கள் உதவி இருக்குமாயின் செய்யலாம்'

'நான் இவ்விஷயத்தில் கட்டாயம் உதவி புரிகிறேன். நமது நண்பர் அமிர்தம் பிள்ளை, இறக்கும் காலத்தில், மனமுருகி, கடைசி சுவாசத்தால் வெளியிட்ட சொற்கள், என் காதிலேயே குடிகொண்டு, எக்காலமும், கனவிலும் நினைவிலும், என் ஞாபகத்தை விட்டகலாது இருக்கின்றன.' என்றார். 'இவ்வளவு நாட்களாய் தேசீய உணர்ச்சி இல்லாத உங்களுக்கு தற்போது இவ்வெண்ணம் உதித்தது நல்லதே, ஆனால், நான் கேள்விப்பட்டதில், மதுவிலக்கு பிரசாரம் தீவிரமாய் இங்கு நடந்தால், உங்களுக்கே கொஞ்சம் அசௌகரியம் ஏற்படும். என்று தோன்றுகிறது' என புன்னகையோடு பதிலளித்தேன்.

'அதற்காகவேதான் நான் துடக்கவேண்டும் என்கிறேன். எனது வரலாற்றைச் சற்று கேட்க வேண்டும். திருச்சி நகரில் மற்றெல்லா இடங்களை விட எங்கள் தெரு, இடைத்தெருவிலேதான், குஸ்தி, சிலம்பம் முதலிய வித்தைகளும் தேகப்பயிற்சிக்காக வேண்டிய பள்ளிக்கூடங்களும் அதிகம். ஆதிமுதல் நான் இவ்விஷயங்களில் மனமுவந்து, இவ்வித்தைகளில் சிறுபிராயம் முதல் தேர்ச்சியடைந்து வந்தேன். எனது தாயார் முதலியவர்களுக்கு நான் கெட்ட சகவாசத்தால் வீணாகப்போகிறேன் என்று தோன்றி என்னை எவ்விதம் கண்டித்தும் எனக்கு மனம் திரும்பவில்லை' என்று கோனார் துடங்க,

'ஆ! இந்த நம் நாட்டவரில் பலர், யோஜியாது செய்யும் தவறு. தேகப்பயிற்சி நமது வாலிபர்களுக்கு அத்தியாவசியமானது. அதில்லாமையினாலேயே, நமது பிள்ளைகள் திடமற்ற புருஷர்களாகின்றார்கள். மேலும் குஸ்தி, சிலம்பம் முதலிய தேசிய வித்தைகள், கட்டாயம் ஆண்பிள்ளைகள் ஒவ்வொருவரும் அவசியம் கற்றுக்கொள்ளவேண்டியது. பெற்றோரும் இளைஞர்களைத் தண்டிக்காமல் இவ்வித்தைகள் கற்கவேண்டிய வசதிகளை, தாங்களாகவே, ஒவ்வொரு இடத்திலும் ஏற்படுத்த வேண்டும்' எனக் குறுக்கிட்டேன்.

'ஆனால் எனது தாயார் பயந்தபடியே நானும் கெட்டவழிகளில் இறங்கி, போதை வஸ்துக்கள்

ஒன்று பாக்கிவிடாமல் அனுபவிக்கும்படி எனது தோழர்கள் பழக்கிவிட்டார்களே! இதுபோல் நம் நாட்டுப்பிள்ளைகளெல்லாருமா பழகவேண்டும்.'

'இல்லை, இத்தீய பழக்கங்களுக்கும், அவ்வித்தைகளுக்கும் ஒரு சம்பந்தமுமில்லை. பெரிய மனிதர்கள், தக்கயோக்கியதை உள்ள கனவான்கள், எனப்படுவோரெல்லாம் இப்படிப்பட்ட நல்ல வித்தைகளை ஆதரிக்காததினாலேயே நமது நாட்டில், இந்த வித்தைகளை மற்றவர்களும் ஆதரிக்கவும், அத்தகையவர் பெரும்பாலரிடம் குடிமுதலிய கெட்ட பழக்கங்கள் இருப்பதால், அவ்வித்தைகளுக்கே குறைவும், ஏற்படுகிறது' என்றேன்;

'இருக்கலாம். ஆயினும் என்னைப் பொருத்த மட்டில் என்தோழர்களால் தூண்டப்பட்ட நான் ஒரு போதைவஸ்துக்கூட விடாமல், எல்லாவற்றையும் உபயோகித்துப் பார்த்திருக்கிறேன். கள், சாராயம், அபின், கஞ்சா, லேக்கா உருண்டை, மதத், பங்கி ஹஷீஸ், ச்சாரஸ், ஒன்று பாக்கி இல்லை. நன்றாய் குஸ்தி செய்துகொண்டிருந்து, நல்லபெயர் எடுத்துகொண்டிருந்த நான், இப் போதை வஸ்துக்களால் திறமைகுன்றி, கற்றுக்குட்டிகளெல்லாம் அலக்ஷியம் செய்யும் நிலைமைக்கு வந்துவிட்டதாலும், அடிக்கடி தெருக்களில், நேராக நடக்கசக்தியற்ற பாம்பை பழிக்கும் நடைபோட்டு, வண்டிகள் முதலிய ஆபத்துக்களில் சிக்க நேரிட்டதாலும், படிகளில் தடுமாறுகிறது

தெரு லாந்தக் கம்பங்களைக் கட்டிப் பிணைக்கிறது, சந்தன மென்று சேற்றைக்கொடுத்தாலும் பூசிக்கொள்கிறது. சிரிக்கவேண்டிய சந்தர்ப்பங்களில் அழுகிறது, அழ வேண்டிய இடங்களில், இடி இடி என நகைக்கிறது. கலியாணங்களில் பிலாக்கணமும், இழவு விழுந்த வீடுகளில [illegible] பாடுகிறதுபோன்ற, பல விபரீத மான செய்கைகளைச் செய்து, கண்டவரெல்லாம் ஏள னம் செய்யும்படி அடிக்கடி நேர்ந்ததாலும், பன்முறை இந்தப்பேதை வஸ்துக்களை நீக்க முயன்றேன். அதி லும் நமது நண்பர் இறந்தபின் அதிக முயர்ச்சி எடுத் தேன். என்ன முயன்றும், எப்போதாவது ஒருநாள் கொஞ்சம் சாராயமாவது சாப்பிட நேர்ந்துவிடுகிறது' என்றார் கோனார்.

'அதையும் அவரே நீக்கவேண்டும்' என, நான் கூற, 'பலநாள் பழக்கம் திடீரென மறக்கமுடிகிறதா பாருங்கள், அநேகர், காபி, டீ, வெற்றிலை பாக்கு, பொடி, புகையிலை முதலிய பழக்கங்கள் வைத்துக் கொண்டிருக்கின்றனர். அவைகளைத் திடீரென ஒழிக்க இயலுமா' என புன்னகையோடு, இப்பழக்கங்கள் பல, என்னை ஆட்கொண்டிருப்பதை உணர்ந்த கோனார் கேட்டார்.

'அவைகளையும் நீக்குவது நன்றே. ஏனெனில் [illegible] இன்பமாயிருக்குமென அவைகளைக் கையா டத்தொடங்குபவர், கொஞ்ச நாட்களில் அப்பழக் கங்களுக்கு அடிமையாகின்றனர். ஆயினும் இப்பழக்

கங்களுக்கும், கள், சாருயம், முதலிய பழக்கங்களுக்கும் பொருத்த ஒருவித்தியாசம் இருக்கிறது. இவைகளால் நாம் மெய்மறந்து பிறரை இம்சிப்பதில்லை. அன்று பூனைக்கால் 'ஜான்ஸன்' என்னும் மதுவிலக்கு போதகரை, நமது ஊரில் ஒருவர், 'காபி, டீ முதலிய தீயபழக்கங்களையும் ஏன் ஒழிக்கமுயலவில்லை, யென்று கேட்க அவர் என்ன பதிலளித்தார் கேட்டீர்களா, 'என்றைக்கு ஒருவன் காபியைக் குடித்துவிட்டு, அந்த வெறியில் தனது மனைவியை அடித்து, மக்களையும் இம்சிக்கிருனே, அன்றைக்கே காபியை ஒழிக்க நானும் முன்வருவேன்' என்ருர், என சமாளித்துக் கொண்டேன்.

'நான் எதற்காக சொன்னேனென்ருல், மதுவை விலக்கவேண்டும் என்னும் எண்ணம் எனக்குப் பூர்ணமாய் இருந்தும், அந்த அவா வருங்காலத்தில், கடையை நோக்கி, என் கால்கள் தானுகசெல்லுகின்றன. அச்சமயத்தில், என்பித்தை மாற்ற ஏதாவது தடை ஏற்பட்டால் நான் திரும்பிவிடுவேன். என் போல் எவ்வளவு ஏழைகள் வருந்துகின்றனரோ ? அதற்காகத்தான் மற்றைய ஊர்கள்போல, நமது நகரத்திலும், மதுவிலக்கு இயக்கம் செய்து, சாத்வீக மறியலும் செய்யவேண்டும் என்கிறேன்' என்ருர்.

' அதற்கு பலபேருடைய உதவி வேண்டுமே' என்றேன்.

‘ குஸ்தி பள்ளிக்கூடங்களிலிருக்கும், பையன்களை எல்லாம் இழுத்துக்கொண்டு வருகிறேன்’ என்றார்.

ஊக்கத்துடன், ஆனால் அதில் பலாத்காரமே இல்லாமல், சாத்விகமாயும், அமைதியாயும் அல்லவா மறியல் செய்யவேண்டும். குஸ்தி பள்ளிக்கூடத்தின் பிள்ளைகள் வந்தால், அவர்களுக்கும் ஆத்திரப்படக் கூடிய கடைக்காரப் பிரபுகளுக்கும், குடி வெறி பிடித்த மூடர்களுக்கும், கலகம் உண்டாகிவிடாமல் இருக்கவேண்டுமே’ என சந்தேகித்தேன்.

‘ உங்களுடைய இயக்கத்தின் அஹிம்ஸா தர்மத்தை, நான் நன்றாய் உணர்ந்தவன். அவர்களுக்கு சரியானபடி போதித்து, பிறகு கொண்டுவருகிறேன்’’ என்று போனார்.

‘ ஒருமாதத்திற்குப் பின்னர் மறியல் போட்டதிற்காக, மூன்று மாதமும், பிறகு ஜாமீனுக்குகாக ஒருவருஷமும், ஆக மொத்தம் ஒன்றேகால் வருஷம் கடுங்காவலென்று,’ காருண்ய அரசாங்கத்தாரின் ஊழியரான, ஒரு ‘நியாயாதிபதி’ எனப்படுபவர், பிச்சைக்கோனாரைப்பார்த்து சொல்ல, அவர் ‘மெத்த சந்தோஷம் ஜுபமீனை’ எனக்கு நீங்கள் பெரிய உபகாரம் செய்தீர்கள். இதை எந்நாளும் மறவேன். எவ்வளவோ முயன்றும், சாராயத்தின் ஞாபகம் முற்றும் அழியவில்லை, குடியில்லா கோட்டைக்குள், இந்த

பதினைந்துமாதம் வசிக்கும்படி தாங்கள் விதித்தகால், அதை முழுவதும் மறப்பது நிச்சயம். வந்தனம் செலுத்துகிறேன் இதுபோலவே மற்றைய குடிகாரர்களுக்கும் நீங்கள் உதவி புரிந்தால் நலமாயிருக்கும். ஆனால் அப்படிசெய்தால், அரசாங்க உத்தியோகஸ்தர்களுக்கு, அதிலும் முக்கியமாய், மேல் உத்தியோகஸ்தர்களுக்கு, ஆள்கள் தட்டாகப்போய்விடுமே என்று யோசிக்கிறீர்கள் போலும்' என பதிலளிக்க,

'போதும்! கைதியைக் கொண்டுபோய், வேறு கைதியைக் கொண்டுவா' என்றதட்டினார் கண்சிவந்த அதிகாரி.



# VI. கருமியின் கனவு.

பருத்த உடலும், கறுத்த மேனியும், சிறுத்த கண்களும், கடுத்த முகமும் உடைய, காதர்லோராவுத்தருக்கு, தற்போது சுமார் ஐம்பது வயது இருக்கலாம். அவர் லேவாதேவி, 'கொடுக்கல்வாங்கல்' என்னும் தொழிலைச் செய்பவர். இஸ்லாம் மதத்தில் பணத்திற்கு வட்டி வாங்குவது, பாவமென்று தடுக்கப்பட்டது' ஹிந்துக்களில் பலருக்குக்கூட தெரிந்தவிஷயம். தொழிலை விருத்திசெய்து அதனால் பல ஏழைக்குடும்பங்கள் பிழைப்பதற்கு ஏதுவாயுள்ள பொருளை, அவ்வண்ணம் செலவிடாமல், தன்னலத்தையே கருதி ஒருவரும் வட்டி வாங்கி பொருள் சேர்க்காத வண்ணம், இப்படிப்பட்ட விதி ஏற்படுத்தியது, இஸ்லாம் மதத்திற்கே மேன்மை அளிக்கிறது. மேலும் வட்டி வாங்குவோர் மனம், வரவர, கல்நெஞ்சமாய் மாறி, ஈவு, இரக்கம், பச்சாதாபம் முதலிய நற்குணங்களுக்கு இடங்கொடாது வரண்டு போவதை, நாம் அநுபோகத்தில், அத்தொழிலையுடையோரிடத்தில் காணலாம். வட்டி வாங்குவது மார்க்கத்திற்கு விரோதமென்றறிந்த, ராவுத்தர், அக்குற்றத்தினின்று தப்புவதற்காக, ஒரு ஏற்பாடு செய்தது வழக்கம். 'வட்டி' என்பதற்குப்பதிலாய் 'லாபம் அல்லது ஆதாயம்' என்று பத்திரங்களில் எழுதிவந்தார். 'பசுவைக் கொன்று பார்ப்பானுக்கு பாதரக்ஷை தானம் செய்வதுபோல்' தனது எண்ணங்களுக்கு இடைஞ்சலி

லாத விமோசனங்கள் தேடுவதும், தன் கண்களை மூடிக்கொண்டு பாலைக்குடிக்கும் பூனையைப்போல், பாவச்செயல்களை மாறு பெயர்களால் அழைப்பின், பிறருக்கும் அவை புலப்படாவென்று எண்ணுவது உலகத்தார் இயல்பெனினும், எல்லாவற்றை அறியக் கூடிய சக்திவாய்ந்த கடவுளையும் இவ்வழிகளாலேயே ஏமாற்றி, அவர் அசட்டையாயிருக்கும் தருணம் பார்த்து, மோக்ஷத்திற்குள்புகுந்து விடலாமென்றும், பிறகு அங்கேயே கூட்டத்தோடு கூட்டமாய் ஒளிந்து கொள்ளலாமென்றும், நினைப்பதாகவும், இதனல் தெரிய வருவதால், இதுவும் ஒரு ஆச்சர்யமாய் விளங்குகிறது.

பலவிடங்களில், சமூசிய மற்றவாக்கியங்களால் தனது மதத்தால் தடுக்கப்பட்ட தொழிலை, நமது ராவுத்தர், ஏன் மேற்கொண்டாரென்றால், அது அவருக்குப்பிறவித் தொழிலாயும், சேர்க்கையால் பயின்ற தொழிலாயும் அமைந்ததினலேயே. கவித்துவம், சித்திரம் வரையும் சாதுர்யம் போன்ற, அபூர்வகுணங்கள் பிறவியால் உதித்து, சிறு பிராயமுதலாகவே, 'விளையும் பயிர் முளையிலே' என வெளிவருவது சகஜமாயிருப்பது போல், இவருக்கு சிறு பிராயமுதல் சிக்கனத்திலும், பிரதிப்பிரயோஜனமோ அல்லது லாபமோ இல்லாமல் ஒருவேலையும் செய்வதில்லை. இதனல் மார்க்கத்திற்கு விரோதமான தொழிலைக் கொண்டாரே யொழிய, மார்க்கத்தினிடத்தில் அவ

ருந்து பற்றில்லை யென்றாவது, தெய்வபக்தியில்லை யென்றாவது, மறுமை உகைத்திய சாம் தண்டனை முதலியவற்றில் நம்பிக்கை இல்லை யென்றாவது எண்ணக்கூடாது.

ஏழைக்குடும்பத்தில் பிறந்த, காதர்லா ராமைச்சர் பிள்ளைகள் தலைவராவதற்கு, அவசியமாயுள்ள சில குணங்களை இளமையிலேயே வெளியிட்டார். காதர்லா எனும் இளைஞனைப்பற்றிய கதைகள் பல யுண்டு. பிள்ளைகள் அநேகர் விளையாடிக் கொண்டி ருக்கையில், தன் பிள்ளையைமட்டுமழைத்து அதன் கையில் தின்பண்டத்தைக் கொடுத்து மற்ற பிள்ளை களிடம் காண்பியாது இங்கேயே தின்றுவிட்டு பிறகு விளையாடப்போ என்று அநேகம் தாய்மார்கள் செய்வதைப்பார்க்கிறோம். இதுபோன்ற சிறு செய் கைகளே, வளரும் குழந்தைகளுடைய மனப் பான்மை நிர்ணயித்து, பிற்காலத்தில், தன் நலமே பாராட்டி, பரோபகாரமெனும் சிந்தனையே யின்றி, அரிதினும் அரிதாய்க் கிடைத்த மானிட ஜன்மத்தைப் பாழாக்கிக்கொள்வதற்கு, படிக்கின்றன. பிற்காலத் தில் பெரிய பதவியிலிருக்கும் தன் மகன் தன் நலமே பாராட்டி, பெற்றோர் குறைகளை கவனிக்காமலும், சுற்றத்தாருக்காவது, பிறந்த நாட்டிற்காவது உப யோகமற்று விளங்கும் பல மானிடப்பதர்கள். அவ் வண்ணமாவதற்கு, அவர் பெற்றோர், அதிலும் முக் கியமாய் அவர் தாயாரே காரணமென்பதை, ஸ்திரீகள்

அனைவரும் அறிந்து தங்கள் குழந்தைகளை ஆதி
முதல் நல்ல பழக்கங்களிலேயே பழக்கிவரவேண்டும்!
அஞ்ஞானத்தில் மூழ்கிய காதர்ஸாவின் தாயாரும்,
ஒரு நாள் தன் மகனை இவ்வண்ணம் அழைத்து,
தனியே தின்று விடும்படியான எச்சரிக்கையுடன்
தின்பண்டங் கொடுத்தபோது, 'எனக்கு புத்தி
சொல்ல வேண்டாமே' என்று பதிலளித்த
காதர்ஸாவை ஆச்சர்யத்துடன் தாய் கவனித்தாள்.
தனக்கு வேண்டிய வரையில் அங்கேயே தின்று
கொண்டான். பிறகு ஒரு நண்பனை அழைத்து, அவ
னிடம் தனக்கு மிகுதியான, தின்பண்டத்தைக்
கொடுக்கும் போதே, நாளைக்கோ, மற்ற எப்போதோ
சௌகரியப்பட்டவேளையில், அதைப்போல், ஒன்
றரை பங்கு தின்பண்டம், திருப்பக் கொடுக்க
வேண்டும் எனப்பேசிக் கொண்டே கொடுப்பதைக்
கண்டாள். தனது குழந்தையின் புத்தி கூர்மையை
மெச்சிக் கொண்டாள். யாருக்காவது வடையோ,
முருக்கோ, கொடுத்தால் அதன் அகலம், நீளம்,
பருமன், சுற்றளவு முதலியவற்றைக்குறித்து அதற்கு
மேலாகவே திரும்பிக் கொடுக்கவேண்டும் என்றும்,
பையன் காதர்ஸா செய்வதுண்டு. இதற்காக, ஒரு
அளவு நாடாவும், திராசும் வைத்திருந்ததாகவும்,
கடலை சுண்டல், நிலக்கடலை முதலியவை, எண்ணிக்
கணக்கிட்டு, லாபம் சேர்த்தே, திரும்ப வாங்குவதாக
வும் அவருடைய பால்ய தோழர்கள் சொல்வதுண்டு.
சில சமயங்களில் கடலைகளின் பருமன் குறைவாக

இருப்பதாகவும், வடைகளில் தொளைகள் பெரிதாக இருப்பதாகவும், திருப்பக் கொடுக்கும் கெடுத்தவறி யதாகவும் குறைகளை சொல்லி அவைகளுக்காக அதிகப்படி சேர்த்து வாங்கிய தாகவும் வதந்தி.

வயதுக்கும், சமத்துவமும் அதிகமாயிருக்கும் இளம்பருவத்திலேயே இத்தகைய தொழிற் செய்திறமை வெளியிட்ட காதர்ஷாவின் சாமர்த்தியம் வீணைக்கூடாதென அவர் தந்தை அவரை ஒரு நாட்டுக்கோட்டை செட்டியாரிடம் காரியஸ்தனாய் அமர்த்தினார். அவரும் தன்மனப்போக்கிற் கிசைந்த அத்தொழிலில் தனக்கு வாய்ந்த இயற்கை தேர்ச்சியைக்காட்டி தன் எஜமானனுக்காக ரங்கூன் முதலிய பல இடங்களில் சென்றுபார்த்து கடைசியில், சொந்தமாகவே "லேவாதேவியாபாரமும்" நடத்தலாயினர். செட்டியார்களுடன் பழகி அவர்கள் தொழிலையே கைகூடி அவர்களைப்போல நடை உடை பாவனைகள் செய்து, சங்கோசமில்லாமல் தொழில் நடத்தி வந்த போதிலும் தன் மதத்தில் அத்தொழில்பாவமெனத் தடுத்திருப்பதை உணர்ந்து, இஸ்லாம்மதத்தில் சித்திரபுத்திரனை ஏமாற்றும் பொருட்டு "வட்டி" என்பதற்கு பதிலாய் "லாபம்" அல்லது "ஆதாயம்" என்றெழுதுவது, ஒரு வித்தியாசத்தை மட்டுமே பாராட்டி வந்தார்.

எனது காலஞ்சென்ற நண்பர் அமிர்தம்பிள்ளையின் கணக்கு வழக்குகளைத் தீர்ப்பதற்காக காதர்ஷா

ராவுத்தரிடம் போக நேர்ந்தது. தொழிலில் தேர்ச்சியுள்ள காதர்ஸா ராவுத்தர் மதுபானத்தில் மூழ்கிய அமிர்தம் பிள்ளைக்கு எவ்விதம் கடன் கொடுத்தாரென சிலர் ஆச்சரியப்படலாம். இப்படி, ஒன்று இரண்டு இடங்களில் "ரொக்க வியாபாரம்" செய்யும் நிபுணர்கள் ஏமாறுவதும், அதையே சுட்டிக்காட்டி அதையே காரணமாகக்கொண்டு அதிக 'வட்டி.' கேட்பதும் வெகு சாதாரணமென்றிருந்தாலும், நமது ராவுத்தர், பிள்ளைக்குக்கடன் கொடுத்ததற்கு வேறு ஒரு காரணமும் உண்டு. சில வருஷங்களுக்கு முன் ஒரு ஊதாரி "மைனருக்கு" சுமார் ரூ. 5000 வரை நூற்றுக்கு இருபத்திரெண்டு விதம் குறைந்த "லாபத்தோடு" கடன் கொடுத்திருந்தார். அந்த "மைனர்" பிரபு சில நாட்கள் தனது ஆட்டம் ஆடிவிட்டு, அதற்குள், தன் பொருள் மமதையால், பலருடைய நீடித்த விரோதத்தையும், நிலையில்லா சிநேகத்தையும் பெற்று, திடீரென, ஒருநாள் ஒருவரும் அறியாமல் "மைனர்கள்" வழக்கம்போல, காரைக்காலுக்கு தன்னிடமிருக்கும், நகைகள், ரொக்க முதலியவற்றை சுருட்டிக்கொண்டு ஓட எத்தனித்தனர். அச்சமயம், தன்முன் சக்கிரவர்த்தியார் உருவப்படமும், பெயரும் வாய்ந்த சாருயப்புட்டியை வைத்து தனது ராஜ விசுவாசத்தை அனுதினமும் "திருச்சி ஜங்ஷன்" ரயில்வே ஸ்டேஷனில் காட்டி வந்த அமிர்தம் பிள்ளை, அவரை தற்செயலாய் கண்டு, அவர் நோக்கத்தை ஊகித்து அவர் தன்னை முன்னொருமுறை அவமதித்

தனை ஞாபகப்படுத்தி, உடனே புறப்பட்டு, தபாலாப் 'வாரண்டு' வைத்திருந்த காதர்ஸா ராவுத்தருக்கு தெரிவித்து, இருவருமாக, உடனே ஒரு மோட்டார் வண்டியில், 'அமீருடன்,' ரயிலில் போகும் 'மைனரை' தஞ்சாவூரில் பிடித்து விட்டனர். அந்த உபகாரம் செய்ததற்காக பிறகு கடன் கேட்ட பொழுது அமீர்தம்பிள்ளைக்கு ரூ 300 ராவுத்தர் கடன் கொடுத்திருந்தார். அந்தத்தொகை தற்போது, 'லாபமும்' 'லாபத்திற்கு லாபமும்' பத்திரத்தில் கண்டபடி சேர்த்துப் பார்த்ததில் ரூ. 750 ஆக வளர்ந்து விட்டது இந்த தொகையில் 'லாப' மென்ற வேஷத்தோடு விளங்கும் 'வட்டியை' கொஞ்சம் தள்ளிக் கொடுக்கவேண்டுமென கேட்கப்போனோம். பண விஷயங்களில், காதர்ஸா ராவுத்தரிடமிருந்து இரக்கமென்பதை எதிர் பார்ப்பது தேசிய விசாரணைகளில் நமது அதிகாரிகளிடமிருந்து நியாயமென்பதை எதிர் பார்ப்பதற்கு சமமானதென்றும், அதற்காக செலவழிக்கும் நேரத்தை 'நாய் வாலின் குணக் கெடுப்பதிற் செலவழித்தால்' அதிக பலனை அடையலாமென்றும் எங்களுக்குத் தெரிந்ததே. ஏனெனில் இதற்கு முன்னர் இருமுறை நான் ராவுத்தர் அவர்களிடம் போயிருக்கிறேன். கலாசாலையில் உயர்ந்த வகுப்பில் படிக்கும் அவருடைய மகனே முதல் விசை அவரிடம் இட்டுச்சென்றான். நமது நகரத்திற்கருகில் பல கிராமங்களில் நெசவுத்தொழில் நடந்துவருகிறது. அநேக நெசவாளிகள், காதர்ஸாவிடம் கடன் வாங்கி

வர்களாதலால் அவர் வார்த்தைக்குட்பட்டு நடப்பார்
களென்று, அவர் மூலியமாய் கிராமத்திய தரிகளில்
கைராட்டின நூல் உபயோகிக்கும்படி சிபார்சு செய்ய
வேண்டுமென கேட்கப்போனோம். தான் தரிக்காரர்
களுக்கு பொருள் கடன் கொடுப்பது தவிர வேறு
ஒரு சம்பந்தமும் அவர்களுடன் வைத்துக்கொள்
வதில்லையென்றும் தானே தேசவாசிகள் 'கதர் துணி'
யேதான் கட்டுவதெனத் தீர்மானித்து விட்டால் தரிக்
காரர்களும் அதையே நெய்வார்களென்றும், அவர்
களை நிர்பந்திக்க தனக்கு இஷ்டமில்லை யென்றும்
எங்களை அனுப்பிவிட்டதுமல்லாமல், வருமான வரி
விஷயமாய் பேசவந்த ஒரு தாசில்தார் முன் தனது
அரசாங்க விசுவாசத்தை அதிகாரிக்கு அறிவிக்கும்
பொருட்டு பணங்கேட்க வந்த ஒரு சேனியரிடம்
'ஆலை நூல் தரிகளையுடையோருக்கு மட்டுமே தான்
கடன் கொடுப்பதாக' ப்பேசினதாகவும் கேள்விப்
பட்டோம். பின்னர் ஒருமுறை திலகர் ஸ்வராஜ்ய
நிதி வசூலுக்காகவும் போயிருந்தோம். 'நான் முன்ன
மேயே உண்டியலில் போட்டுவிட்டேன்' என்று
சொல்லி எங்களை அனுப்பிவிட்டார். எங்கள் உண்டி
பெட்டிகளில் நாணயங்களை எளிதில் எண்ணுவதற்
காக, வெவ்வேறு அறைகள் தடுத்திருந்தோம். அவை
களுள் விழுந்த நாணயங்களனைத்தும், வெள்ளி
நாணயங்களாயிருக்க, ரூபாய்கள் விழும் அறையில்
ஒரு அரை அணா காசு கிடந்தது. அதைப்போட்டது
தாசில்தார் ராவுத்தராகத்தானிருக்கவேண்டுமென

னைத்தோம். இவ்விரு முறைகளின் அனுபவத்தை மறவாதபோதிலும், பிழைக்கமாட்டாரென்று நிச்சயமாய்த் தெரிந்தபோதிலும், நோயாளி தொண்டையில் மருந்தூற்றுவது போல, நம்பிக்கை இல்லாவிடினும், ஒரு முறை கேட்டுப்பார்க்கலாமென்று ராவுத்தர் அவர்கள் வீட்டுக்குப்போனேம்.

வந்தவர்களை உபசரித்து வந்ததின் காரணம் வினவினார். அதிகமாய்ப்பேசியும், விஷயத்தைச் சுருக்கிச் சொல்லினும் ஒரே விதமுடிவுதான் கிடைக்குமென்றறிந்த நான் 'அமிர்தம் பிள்ளை அவர்களின் கணக்கைத் தீர்த்துவிட்டுப் போகலாமென்று வந்தோம். அதில் இந்த வட்டித்தொகையை—' எனுமுன் 'அல்லல்லா!' என்று காதைப்பொத்திக்கொண்டு, 'வட்டியா! அது மார்க்கத்திற்கு விரோதமாயிற்றே' என்றார் ராவுத்தர்.

'அடடா! மறந்துவிட்டேன். நான் சொல்ல வந்த தென்னவெனில், அவருடைய பிள்ளைமக்களின் நிமித்தம், பத்திரத்தில் குறிப்பிட்டிருக்கும் 'லாபத்தை'த் தள்ளிக்கொடுத்து, முதலை மட்டும் வாங்கிக்கொண்டு, கணக்கைத்தீர்த்து வைக்கவேண்டும்' என்றேன். 'எனக்கும் பிள்ளைமக்களிருக்கிறார்களே. நான் அவர்களுக்காக பொருள் ஈட்டவேண்டாமா? லாபத்தை எங்ஙனம் தள்ளிக்கொடுக்க முடியும்?' என்றார்.

‘அவர் இறந்துவிட்டபடியால் குழந்தைகளிடம் கருணை காட்டவேண்டும்’ என வேண்டினோம்.

‘எங்கள் தொழிலில் கருணை காட்டினால், கூடிய சீக்கிரத்தில் மஞ்சக்கடுதாசி கொடுத்துவிட்டு, தெருத் தெருவாய், பிச்சையெடுக்கக் கிளம்பவேண்டியது தான்’ என கண்டிப்பாய் அவர் கூற, நாங்கள் பதிலுரைக்கும் முன், அவர் காரியஸ்தர் ஒருவர் அங்கு வந்து, சலாஞ்செய்து நின்றார்.

‘நீர் எங்கிருந்து வந்தீரையா?’ என ராவுத்தர் கேட்டார்.

‘நான் தங்களிடமிருந்து உத்தரவு பெற்றுப் போனது முதல் ஒச்சலொழிவின்றி, அலைந்து திரிந்து கொண்டிருந்தேன். கடைசியில், இப்போது தான், என் பெண்ணுக்கு ஒருவரன் நிச்சயித்து வந்தேன். நாளைக்குக் கலியாணம்—’

‘அடே! சங்கதியைச் சொல்லித்தொலையுமே. வீண் எளவு கதையெல்லாம் வளர்த்துகிறீரே’ என்றார் ராவுத்தர், தான் செட்டியார்களிடமிருந்து கற்ற, சுப, வார்த்தையுடன்.

‘அது தான் சொல்லுகிறேன். நாளைக்கு கலியாண மாதம் முடிவு பெறுகிறது. அதன் பிறகு ஆறு மாதத்திற்கு கலியாணமே நடக்கமுடியாது’ என்றார்

காரியஸ்தர். 'சனி அழித்தது என்று இருந்துவிடுமோ! இந்த அளவுக்குமேலே என்ன செய்யச்சொல்லுகிறீர். 'இங்கே, பெண்ணுக்கோ வயதாகிவிட்டது. இனி காத்திருந்தால் ஜாதி பிரஷ்டம் செய்திடும். கையில் சேகரித்து வந்த பணத்தையெல்லாம் அங்குமிங்கும் அலைவதில் செலவழித்து விட்டேன். இன்று மத்தியானத்திற்குள் ரூ. 500 பிள்ளை வீட்டாருக்குக் கொடுத்து விடவேண்டும். இல்லாவிடின் வரன் வேறு விதமாக பைஸலாகிவிடும். வரனும் நல்லவரன்' என்றார்.

'ஆ! அப்படி சொல்லும் ஐயா! எந்த அளவு பெரும் கடையில் பணத்திலே தானே வந்து முடிகிறது. அதிலும் பார்ப்பார் பேசினால், பணத்தை அடையும் பொருட்டே பேசுவதாயிருக்கிறது' என்று என்னை கடைக்கண்ணால் நோக்கினார். நான் கவனியாது போலிருந்தேன். அவருடைய காரியஸ்தர், 'ஏதோ தங்களிடம் இவ்வளவு வருஷங்களாக உழைத்து வந்தோமே! இப்படிப்பட்ட ஆபத்தான சந்தர்ப்பத்தில், என்னை, கைவிடமாட்டீர்களென்றே நம்பி, நான், எல்லா ஏற்பாடும் செய்து விட்டேன். கடை ஆட்களில் எல்லோரையும் கேட்டாயிற்று, நான் பழைய ஊழியன். இவ்வளவு நாள் உழைத்த எனக்கு இச் சமயம்—' 'சும்மா வேலை செய்யவில்லையே, ஐயா! சம்பளம் மாதா மாதம் தவறாமல் வாங்கி வரவில்லையா?' என்றார் எஜமான்.

'கடனைக் கேட்கிறேன். நெருக்கடியான இச்சமயத்தில் நீங்கள் உதவாவிடின் நான் என்ன செய்வது? வட்டிமட்டும்'—

'வட்டியா! அல்லல்லா!' என்றார்.

'அதுதான் 'லாபம்' அதிக லாபத்தை வைத்து ஏழை என்னைத்தாக்காமலிருக்கவேண்டும்; அதுதான் நான் கேட்டுக்கொள்ளுகிறது; அப்படிக்கொடுத்தால் இனும் கொடுத்தாற்போல்.'

'இனும் கொடுக்கலாம் ஐயா! ஆனல் பணத்தை மட்டும் ஆதாரமின்றிக் கடன் கொடுக்கக்கூடாது. அதுவே, தரித்திரத்தை வரவேற்கும் வழி. பணம் வேண்டுமானல், நம்முடைய வழக்கப்படி வாங்கிக் கொண்டுபோம். வியாபார விஷயத்தில் அண்ணன் தம்பியானலும் தாக்ஷண்யப்படக்கூடாது' என்று கண்டிப்பாயுரைத்து விட்டார்.

பிறகு என் பக்கம் திரும்பினர்.

'பார்த்தீர்களா! இரக்கப்படுவதென்று ஆரம்பித்தால் இந்தத்தொழிலுக்கு ஆபத்து வருமென்று நான் சொன்னதின் உண்மை விளங்கிற்று? தாங்கள் வெகு நேரமாய் காத்திருக்கிறீர்கள்' என்று சொல்ல, மனங் கசந்து, நாங்கள் புறப்பட்டுச் சென்றோம்.

மறுநாள் காரியஸ்தர் வீட்டுக்கலியாணத்திற்கு போய், சீனி கற்கண்டு தாம்பூல முதலியவைகளை

வாங்கி மடியில் கட்டிக்கொண்டு, பிறகு அமிர்தம் பிள்ளை வீட்டிற்குச் சென்று, அங்கு அவர்கள் நிலைமையைக்கண்டு பரிதவிப்பது போல் நடித்து, தனது துரைகளைப்பற்றி ஞாபகப்படுத்திவிட்டுக் கடைசியில் வக்கீல் வீட்டிற்குப் போய்விட்டு, திரும்ப, இரவு வெகு நேரத்திற்கப்பால் தன் வீடு வந்து சேர்ந்து, வக்கீல் வீட்டிலேயே, உருளைக்கிழங்கு, தயிர்வடை, பொரிச்சக்கொட்டை முதலிய சிற்றுண்டிகளை வயிறுமுட்ட உண்டதால் நேரே நித்திரைக்குப்போனார்.

காதர்ஸா ராவுத்தருக்கு அடிவயிற்றில் பெரியதொரு 'ராஜப்பிளவை' புறப்பட்டு விட்டதென, அவ்விருக்கும் உபாதையால் அறிந்துகொண்டார். எரிச்சலான எரிச்சலில்லை! கொளுத்துகிறது! உருக்காங்கல்லால், மேல் தோலைமட்டும் சுரண்டி விட்டு அதன் மேல் பச்சைமிளகாயும், காஞ்சூறி இலையும், கலந்தரைத்த பற்றைத் தடவியதுபோல் காந்திற்று. 'ஐயோ! என்னால் சகிக்க இயலவில்லையே! அல்லா! ஹாமதலா! கடவுளே!' என்றலறினார். நாகூருக்குப் போய் அங்கு அடங்கியிருக்கும் மகானுடைய சமாதியை, தரிசிப்பதாய் வேண்டிக்கொண்டார். என்ன செய்தும், எரிச்சலும் நோவும் மாறவில்லை. கடைசியாய், முன்னொரு நாள் தனது மகனுடன், வீட்டிற்கு வந்த மௌலானா ஒருவர், அந்த வருவதைக்கண்டு, அவரை வணங்கி 'குருவே என்னைக் காத்தருள வேண்டும். நான் படும் அவஸ்தை, நரகத்திலும் பாவிகள்

படமாட்டார்கள் போலிருக்கிறது. எனது வயிற்றிலிருக்கும் எரிச்சலைப்பார்த்தால் அங்கு பெரியதோர் கடல் ஏரிலதாகத் தோன்றுகிறது,' என்றார் முன்னர் விருந்தாளியாக அழைத்து வந்ததற்காக தன் மகளைக் கடிந்த காதர்ஷா ராவுத்தர்.

புன்னகையோடு அந்த மௌலானா 'ஒருவேளை, பின்னர், கிடைக்கும் பதவியினை, குறிப்பைக்காட்டுகிறதற்காக, அனுப்பப்பெற்ற அடையாளமாகவிருக்கலாம்,' என்றார். 'ஐயோ! ஐந்து வேளையும் ஒரு நாள் தவறாது தொழுதுகொண்டு வரும் எனக்கு நரகத் தீயில் சிக்கும் தண்டனையும் கிடைக்குமா? இருக்கவே இராது!' என்று அலறிக்கொண்டு, 'அது போகட்டும். இப்போது ஏன் எனக்கு இந்த மாய எரிச்சல் எரிகிறது,' என்று துடித்தான்.

'அப்பா! பல பேருடைய வயிற்றெரிச்சல், ஒருங்கேகூடியதின் சக்தியாகும். எவ்வளவு குடும்பங்கள் வயிறு பசியால் நோகச்செய்தனையோ' என மௌலானா இடித்துச்சொன்னார்.

வயிற்றைத்தடவிக்கொண்டே காதர்ஷா ராவுத்தர். 'ஐயோ! அல்லல்லா!! எவ்வளவு பெரிதாய் வீங்கிவிட்டது! ராஜபிளவை போலல்லவா இருக்கிறது.' என முனு முனுத்தான்,

'அது ராஜபிளவையல்ல!'.

ராவுத்தர்:- 'ஐயோ! அத்தோடு நிற்காதுபோலிருக்கிறதே! இன்னம் முதுகு முதலிய பல இடங்களிலும் எரிச்சல் காண்கிறதே! தேகமெங்கிலும் புறப்பட்டுவிடுமோ!'

மௌலானா:- 'உனது பண ஆசை ஒரு குடும்பத்தை மட்டுமா அழித்தது! ஊரெங்கும் நாசமாக வில்லையா!"

ராவுத்தர்:- ' குருவே! போதுமே! உங்கள் கொடுமை! புண்ணிற்கு மருந்திற்காக உங்களிடம் வந்தால், பச்சைப்புண்ணில், குச்சியெடுத்துக் குத்துவது போல் சித்திரவதை செய்கிறீர்களே! இது உங்களுக்கு மேன்மை! மகாத்மா காந்தியின் நண்பரென்றும், அம்மகானுடைய அஹிம்ஸா தர்மத்தை நன்குணர்ந்தவரென்றும், என் மகன் தங்களை சிலாகித்துப் பேசினானே, என்றல்லவா, உங்களை அண்டி என் ஹிம்ஸையை தீர்த்துக் கொள்ள எத்தனித்தேன்! தேவரீர் கருணை வைக்கக்கூடாதா!"

மௌலானா:-' அவ்விரணங்களை கத்தியால் அறுத்துத் தான் ஆற்றவேண்டும். அதற்காக, வைத்தியர் இதோ வருவார்.

ராவுத்தர்:-' கிறியா ஆற்றவேண்டும்! வேறு வகையில்லையா! பிளவை அமிழும்படி செய்ய ஒரு மருந்தாவது மந்திரமாவது இல்லையா!'

மௌலானா:—"பணத்தைக் குவியலாய்ச் சேர்க்க யத்தனிப்பாரு ஏவனிருந்தவன் அதை, வா, வா, பலருக்கும் பங்கிட்டுக்கொடுத்து வருகிறேன் அவனுக்குத்தான் அந்தவகைய சிகிச்சை. உனக்குக் கிறியேதான் ஆற்றவேண்டும். இதோ! வைத்தியரும் கையில் கத்தியுடன் சித்தமாய் வந்துவிட்டார்."

இம்மொழியைக் கேட்டதும், உடல் நடுங்கி அவர் சுட்டிக்காட்டிய பக்கம், ராவுத்தர், திரும்பிப் பார்த்தார். உடனே பெருக்கிகிலடைந்து, வெறி கொண்டவனைப்போல், "வேண்டாம்! வேண்டாம்! இனிமேல் இல்லை! ஒழுங்காய் நடந்துகொள்ளுகிறேன்!" என்று கூக்குரலிட ஆரம்பித்தார். ஏனெனில் அங்கு திரும்பிப்பார்த்தவுடன், கையில் ஒரு பெரிய கசாய்க்கடை கத்தியை ஏந்தி, காலஞ்சென்ற அமிர்தம்பிள்ளை நிற்பதைக் கண்டார். "செய்ந்நன்றி மறந்து, மாந்தரை வதைக்கும் பாபிகளை எளிதில் விடக்கூடாது. இப்போது அலறுவாய். நாளைக்கு இதையெல்லாம் மறந்துவிடுவாய்" என்று சொல்லிக் கொண்டு, மௌலானாவும், அமிர்தம் பிள்ளையுமாய் சேர்ந்துப்பிடித்து பிளவைகளையெல்லாம் வக்கசாத்து அறுக்கத்தொடங்கினார்கள். அந்த வேதனை தாங்க முடியாமல், மெய் சிலிர்த்து, உடலெங்கும் வியர்த்து, மூர்ச்சை ஆகிவிட்டார், ராவுத்தர்.

அதாவது விழித்துக்கொண்டார்.

ஒருபுறம் பன்னியும், மறுபுறம் மகனும் இருந்து தன்னைத் தூக்கி, எழுப்பி, "என் கிலி பிடித்தது

போல் கூக்குரலிடுகிறீர்?" எனக்கேட்பதை கவனித்தார்.

"ஒன்றுமில்லை. அந்த அமிர்தம் பிள்ளை —— அடிவயற்றில் பிளவையை ——" என்று முணுமுணுக்க,

"அடிவயற்றில் பிளவையா! அமிர்தம் பிள்ளையா! என்ன பிதற்றல்!" என்று சொல்லிக்கொண்டே அடிவயற்றில் ஏதேனுமிருக்கிறதோவென்று அவர் மகன் பார்க்க, அங்கு அவர், காரியஸ்தர் கலியாண வீட்டிலிருந்து கொணர்ந்த கற்கண்டு ஜீனியைத் தின்பதற்காக எரும்புகள் கூட்டங்கூட்டமாய் இருப்பதையும், இன்னும், கால், இடுப்பு முதலிய இடங்களில் அவை உல்லாஸமாய் உலாவுவதையுங் கண்டு அவைகளைத் தட்டியெறிந்தான்.

அதிகமாய் படித்தவனாவது, அல்லது அதிகதைரியமுள்ளவனாவது, மேற்கூறிய கனவை மதியாது, அதன் நிகழ்ச்சிக்குச்சாஸ்திர பூர்வமான காரணங் கற்பிக்க முயலுவான். ஆனால் காதர்ஸா ராவுத்தரை அக்கனவு முழுதிலும் மாற்றிவிட்டது. மறுநாள் காலைமுதல் அவர் மனமும் மாறி, முகமும் மலர்ந்தது. தேகமே புதியதோர் ஒளியுடன் பிரகாசிக்கலாயிற்று. கனவில் வந்த கோரஸ்வரூபமுள்ள, அமிர்தம் பிள்ளைக்காக, காலையிலேயே, அவர் பத்திரத்தைக் கொண்டுபோய், அவர் மனைவியாளிடம் கொடுத்து, "அம்மணி! நேற்று, உன்னையும், குழந்தைகளையும்,

பார்த்த பின்னர் எனது மனம் வாடி, என்னாலான சிறு உதவியைப்புரியவேண்டுமென என்னைத் தூண்டிக்கொண்டே வருகிறது. எனக்கு ஒரு சங்கர்ப்பத்தில் உதவிபுரிந்த, உன் கணவன் கொடுத்த பத்திரம் இதோ இருக்கிறது, அதை எடுத்துக்கொள். உன்னால் கஷ்டமின்றிக் கொடுக்கமுடிந்த தொகையைக் கொடு. முடியாவிடின், கவலைப்படவேண்டாம், நான், உன் குழந்தைகளுக்கு உதவிபுரியக் கடமைப்பட்டவன். தேவையானபோது எனக்குத் தெரிவிக்கவும்" என்று, சொல்லிவிட்டார். பிறகு, தனது ரணங்களின் ஞாபகம் வரவே, மயிர்க்கூச்செரிந்து, உடனே, தனது காரியஸ்தர் வீட்டிற்குப்போய் "ஐயரே! நேற்று உம்மை சோதித்தேன். நீர் நமக்கு வெகு காலம் உண்மையாய் உழைத்தவர். இதோ உம்முடைய கடன் பத்திரத்தை நான் உமது குழந்தைகளுக்கு இனாமாக அளித்ததாக எண்ணி, கடனை, தீர்த்ததாக பிறகு கணக்கிலெழுதிவிடும்" என்று சொல்லி, அவ்வேழை உள்ளம் பூரிக்கச்செய்தார்.

இவ்வண்ணமெல்லாம் நடப்பதசாத்தியமென நினைக்கும் நண்பர், "காதற்ற ஊசியும் கூட வாராது காண்" என்ற ஒரு குரு வாக்கியத்தால் கோட்டீசுவரரான பட்டணத்துப் பிள்ளையின் மனம் எங்ஙனம் மாற்று என்பதை நினைத்துப்பார்க்கவேண்டும்.

கடைசியாய், மகாத்மா காந்தியின் நண்பரான மௌலானா கனவில் வந்த நிலையை மறவாத ராவுத்தர்,

மகாத்மாவின் முழு மனதையும் கவர்ந்துகொண்ட "கதர் உற்பத்தி" என்னும் நோக்கத்தையே தன்னா லியன்றமட்டும் அபிவிருத்தி செய்ய நிச்சயித்து, தனது பொருளுதவியாலும், நெசவுக்காரர்களிடம் தனக்குள்ள செல்வாக்கினாலும், தகுந்த உதவிபுரிந்து வந்தார்.

நண்பர்காள்! இத்தகைய நோக்கத்தின், நேரான இயல்பை விளக்கிக் காட்ட நமக்கெல்லாம் கூட ஒரு கனவு வேண்டுமோ? காலநிலைமையின் போக்கைக் கவனித்து வரும் நமக்கு, நமது தாய் நாட்டின் தற்போதிய பரிதாப ஸ்திதியின் உண்மை, நினைவுடனிருக்கும் நம் கண்முன் நிற்க, கனவும் அவசியமோ! கதரையே அபிவிருத்தி செய்யுங்கள்.

சுபம். சுபம். சுபம்.

# VII.

## "நாமொன்று நினைக்கத் தெய்வமொன்று நினைக்கிறது".

நமது திருச்சி ஜில்லாவின் நிலங்களைச் செழுப்பித்து, நம நாட்டிலுள்ள மக்கள் அனைவருக்கும் பசி தீர உணவளிக்கும் நற்காரியத்தில் ஈடுபட்ட பாரததேவியாரும் பூமிதேவிக்குத் துணையாய் நிற்கும் காவேரி தேவியை யண்டி, அவள் ஆதரவின்கீழ், அவளருகில் சிறப்புற்று வளரும் கிராமங்கள் அநேகம் உள. திருச்சி நகரிலிருந்து மேற்குத் திக்கை நோக்கிச்செல்லும் பிரயாணிகள் யாவரும், வழிமுழுதும், கண்ணுக்குக் குளுமையாய் விளங்கும் நெல் வயல்களையும், வாழை, தென்னைத்தோப்புகளையும் கண்டும், இவை நடுவே ஒளிக்கும் கிராமங்களைக்கண்டும், மனமகிழாமலும் அந்த கிராம வாசிகளின் பாக்கியத்தை மெச்சாமலுமிருப்பது அரிது. இந்த தேசமுழுதும் பிரதேசத்திற்கு வெள்ளி வரம்பு கட்டியதுபோல், காவேரி நதி விளங்குவதையுங் கண்டு பூரிப்பர்.

இந்தப் பிரதேசத்தில், ஒரு கிராமத்தில், இரண்டு நண்பர்களிருந்தனர். இருவர் பெயரும் "கிருஷ்ணமூர்த்தியே". இருவரும் பிராமண குலத்திற் பிறந்தவர்கள். இருவரும் ஒரே வயதாயும், ஏறக்குறைய ஒரே மனோபாவமுடையோராயும், நெருங்கிய பந்துக்களாயுமிருப்பினும், இருவருக்கும் சில பேதங்களுந்

யிருந்தன. இருவருக்கும் ஒரே பெயர் வாய்ந்திருந்த தால், அவர்களை அழைப்பதில், வேண்டியவரைக் குறிப்பிடும்பொருட்டு, ஒரு பையனை "கிட்டு" என்றும் மற்றைய பையனை "மூர்த்தி" என்றும், உறவினரும் ஊராரும் அழைப்பது வழக்கம்.

"மூர்த்தி" என்றழைக்கப்படுபவன், ஒரு பெரிய சர்க்கார் உத்தியோகஸ்தரின் மகன். அவனுடைய தந்தை சற்றேறக்குறைய இருபத்தைந்து வருஷகாலம் நமது அரசாங்கத்தாரின் ஊழியனாக, சென்னை ராஜ தானியில் பற்பலவிடங்களில் சேவகஞ் செய்து வந்தார். "கிட்டு" என்பவனுடைய தந்தையோ, கிரா மத்திலேயே இருந்துகொண்டு, தனக்குள்ள சொற்ப பூமியை வைத்துக்கொண்டும், வைதீக தொழிலைக் கொண்டும், அற்ப ஜீவனம் நடத்திவந்து, பையன் கிட்டு பிறந்த இரண்டு வருஷங்களுக்குள், பையனை யுந் தன்மனைவியையும், அனாதைகளாய் நிறுத்தி விட்டுக் காலஞ்சென்றார். இந்தக் குடும்பத்திற்கும் மூர்த்தியின் தகப்பனார் தன்னாலியன்ற உதவி புரிந்து வந்தார்.

மூர்த்தியும் கிட்டுவும் அத்தியந்த சிநேகிதர்க ளாய் வளர்ந்துவந்தனர். இருவரும் ஒரே பள்ளிக் கூடத்தில், ஒருவகுப்பில் படித்து வந்தனர். கிரா மத்தில் இவ்விருவாலிபர்களுடைய நட்பைப்பற்றியும் பலி, பந்தாட்டம், நீச்சல் முதலிய கிராம விளையாட்டு களில் இவ்விருவரின் தேர்ச்சியையும், பள்ளிக்

கூடத்திலும் இருவரும் தவறாது சேர்ந்து வருவதையும் கண்டு ஆனந்திக்காதவர்களில்லை. சிறு பிராயமுதல் நண்பர்களாய் வளர்ந்துவந்த வாலிபர்களும், கிராமத்திலிருக்கும் மற்றைய பிள்ளைகளைப்போலவே, தங்களுக்குள்ளாகத் தாங்கள் பின்னர் செய்யும் செய்கைகளைப்பற்றியும், தங்கள் எதிர்கால வாழ்க்கையின் இயல்பைக் குறித்தும், ஆகாயக்கோட்டைகள் கட்டிக்கொண்டும், அவைகளைக் குறித்து ஒருவரோடொருவர் சதா கலந்துகொண்டிருப்பது வழக்கம். அவ்வூராருக்கும் "மாமா"வாய் விளங்கிய ஒருவர், இராமாயணம், மகாபாரதம் முதலிய புராண இதிஹாஸக் கதைகளிலிருந்து, வாலிபர் மனதை முழுதும் கவரும்படியான வீரச்செயல்களும், துணிகரச்சம்பவங்களும், காதற் தொடர்புகளும் வாய்ந்த கதைகளைச் சாதுர்யமாய், அவர்கள் இளம்பருவத்தில் எடுத்துரைத்ததே இதற்கு முக்கிய காரணம். நம் நாட்டிய புராதன வீரர்களைப்போல கீர்த்திவாய்ந்த வாழ்க்கையைப்போலவே, நாமும் நமது பெயரையும் நிலைநிறுத்தும்படியான அரிய செயல்களைச்செய்து வாழ வேண்டுமேயொழிய, மற்றவரைப் போல், சாதாரண வாழ்க்கையில் மூழ்கி, லக்ஷத்தோடு லக்ஷத்திலொன்றாவதாய் "பிறந்தான், இருந்தான், இறந்தான்" என்று காலங் கழிக்கக் கூடாதென, இருவரும் தீர்மானித்துக்கொண்டனர். உடுப்பதும், உண்பதும், உறங்குவதும், உற்பத்தி செய்வதுமே தவிர வேறு அசாதாரண சம்பவங்களின்றி இல்லாத, குடும்ப

கவலையிலாழ்ந்து, உற்சாகமற்ற வாழ்வு வாழும் தங்கள் பெரியவர்களைக்கண்டு, சிலவேளை பரிதபித்தும், அவர்கள் சிலவேளைகளில் செய்யும் அற்பச் சச்சரவுகளைக் கண்டு நகைத்தும், இருவரும் வளர்ந்துவந்தனர்.

கவலையெனும் ஆலையால் சிதறப்பெற்ற சார் போன்ற உற்சாகத்தை யிழந்த சக்கைபோன்ற வரண்ட நெஞ்சையுடைய வாலிபப் பருவத்தைக் கடந்த நண்பர்காள்! நாமும், முன்னொரு "மாமா"வின் கதைகளைக் கேட்டு, இவ்விதமே எண்ணியதில்லையா! பழையபடி, அப்பருவத்தை யடைந்து, மீளவும் அக்காலத்திய ஆகாயக் கோட்டைகளை அமைக்கும் சக்தி நமக்கு வருமாயின், அதற்கீடாக எதைத்தான் நாம் அளிக்கமாட்டோம்! இன்னுமொரு முறை நமக்கு அச்சந்தர்ப்பம் வாய்க்கின், எவ்வளவு ஆச்சரியமான வாழ்க்கையை நடத்திக் காண்பிப்போமென்று, இன்னமும் சில வேளைகளில் நாம் எண்ணுகிற தில்லையா?

காலக் கொடுமையால் யுத்தத்தி நிமித்தம், சகலமான பொருள்களும் பன்மடங்கு விலை ஏறிற்றெனினும், யுத்தத்திற்கு முன்னரேயும், நமது தமிழ் நாட்டில், பெண்களுக்கேற்ற வரனாயுள்ள பிள்ளைகளின் விலை, விஷமேறுவதுபோல், ஏற ஆரம்பித்திருந்தது பெண்களைப் பெற்ற பாவிகள் அனைவருக்கும் தெரிந்ததே. அங்ஙனமிருக்க, ஆறாயிரம் மயிலுக்கப்பாலுள்ள சில தேசங்கள், இரத்தக்கொழுப்பு அதிக

ரித்த, அதிகப்படி இரத்தத்தை சிந்துவதே சரியெ
னத் துணிந்த காரணத்தால், ஒருபாவமுமறியாத
அப்பிராணிகள் நிறைந்த நம் நாட்டில், அகிலே
யுத்தம் அதிகமான காலத்தில் இந்தப் பண்டத்தின்
விலையும் மறுமுறை ஏறிற்று.

இத்தகைய வரட்சை காலத்தில், பெரிய உத்தி
யோகத்திலிருப்பவருடைய மகனும், பரீக்ஷைகள்
தவறாது தேறிவருபவனுமுள்ள, மூர்த்தியைக்குறித்து
பெண்பெற்ற பருந்துகள் வட்டமிட ஆரம்பியாதிருக்
குமா? தன் நண்பனோடு பற்பலவிதமான ஆகாயக்
கோட்டைகளைக் கட்டி அவற்றுள் உல்லாஸமாய்,
சுதேச்சையாய் உலாவி வரும் மூர்த்தி தன்னாலியன்ற
மட்டும், தனக்கு, இவ்விளம் பருவத்தில், விவாஹம்
வேண்டாமென, மன்றாடிப் பார்த்தான். விவாஹ
விலங்கை அணிந்துவிட்டால், பிறகு எப்படி ஆகாயக்
கோட்டைகட்டு பறப்பது! ஆனால் என்ன சொல்
லியும் அவன் தகப்பனார் கேட்கவில்லை. வயது
சென்ற அவன் பாட்டியும், தன் பேரனுக்கு மண
முடித்த பிறகுதான், தான் உயிரைத் துறக்கவேண்டு
மென, யமனோடு மன்றாடிக்கொண்டிருப்பதாகத் தெரி
வித்தாள். பாட்டியின்மேல் அதிகப் பிரியமில்லாவிடி
னும் அவள் ஆயுள் விருத்திசெய்யும் பொருட்டாவது,
தன் விவாகத்தை ஒத்தி வைக்கவேண்டுமென, தகப்ப
னாரை வேண்டினான். "கூடவே கூடாது. இப்
போதே கலியாணம் செய்துவிடவேணும்" என

மூர்த்தியின் தாயார் வற்புறுத்தினதை, தன்மாமியா ரிடம் துவேஷங் கொண்டதாலெனக் கொள்ளல் தவறு. கடைசியில், சென்னையில் வக்கீலாயிருந்த ஒருவர் மகளை மூர்த்திக்குக் கலியாணம் செய்துவைத் தனர். எவ்வளவு பலமான கோட்டை கட்டிய போதும், அதைத் தவிடு பொடிக்கவல்லதோர் பீரங் கியுமுண்டென, சென்றயுத்தத்தால் தெரிந்த நமக்கு, மூர்த்தி கட்டிய ஆகாயக் கோட்டைகளின் கதியைப் பற்றி ஆச்சரியப்படுவதற்கு ஹேதுவில்லை. ஆனால், மூர்த்திக்குக் கலியாணம் செய்த பின்னர்தான் வரு வேனென்று மன்றாடிக்கொண்டிருந்த பாட்டி, மறு முறை எமதூதர்கள் அழைக்கும்பொழுது, அவர்களை வஞ்சித்தவிதம் வியக்கத்தக்கதே. முன் காலத்தில், இரக்க வந்தவர்களுக்கு, அண்டை வீடுகளை காண் பித்து, அதனால் தன் ஒரு விரலுக்குமட்டும், மோக்ஷத்தை ஒரு செட்டியார் பெற்றாரென, கதை சொல்லுவார்கள். அதுபோல், வந்த எமதூதருக்கு அந்தக் கிழவி, தன் மகனையே சுட்டிக் காண்பித்து, தான் இன்னும் கொஞ்ச காலம் இப்பூலோக இன்ப மற்ற வாழ்க்கையைப் பெற்றதாகத் தோன்றிற்று. நாடெங்கும் பரவி, பொருக்கி யெடுப்பது, எடுத்துக் கொண்டுபோன, புதிய "இன்பளூயென்ஸா" ஜுரம், பென்ஷனுக்காக ஆசைப்பட்டு பல வருஷம் உழைத்த மூர்த்தியின் தகப்பனாரையும், அப்போதுதான் தலை யெடுத்து மைலாப்பூருக்கு ஜாகையைமாற்றிய அவன் மாமனாரையும், வக்கீல்களும், பென்ஷன்களும்

தேவையில்லாத உலகத்திற்குக் கொண்டு சேர்த்து விட்டது.

ஒரு மாதத்திற்குள், தன் தகப்பனையும், தன் மனைவி தகப்பனையும், இழந்த மூர்த்தி திடமானக் கஷ்டத்திலாழ்ந்தான். அப்போது அவன் பி. ஏ. பரீக்ஷைக்குப் படித்துக் கொண்டிருந்தான். நீண்ட காலம் சர்க்கார் உத்தியோகத்தில் அமர்ந்திருந்த அவன் தகப்பனார் தன் அந்தஸ்தைக் காப்பாற்றுவதிலும், தன் மகனுக்கு உயர்தரக் கல்வியளிப்பதிலும், தன் சம்பாத்தியமனைத்தையும் செலவிட்டுவிட்டார். வெகு கஷ்டப்பட்டு அந்தப் பரீக்ஷையை முடித்தான். இதற்காகத் தனக்கிருந்த சொற்ப பூர்வீக பூமியையும் அவன் விற்கும்படி நேர்ந்தது. பி. ஏ. பரீக்ஷை தேறியபின்னர், ஏதாவது உத்தியோகம் கிடைக்குமோவென்று, ஒவ்வொரு இடமாய் அலைந்து தன் மனம் நொந்தபோது தான், தன் பயனற்ற படிப்பின் உபயோகமில்லாத்தனத்தை முற்றிலுமுணர்ந்தான். எங்கு சென்றாலும் இருபது ரூபாய்க்குமேல் சம்பளம் கிடைக்கவில்லை. வீட்டிலோ, மனைவி ஜயமுடன வெகுநாளாய்ப் போராடி வரும் பாட்டி, பெரிய உத்தியோகத்திலிருந்த கணவனையிழந்ததாய், பிறவிமுதல் புதிய நாகரீக முறையிலேயே பழகி, இல்வாழ்க்கைக் குரிய பழக்கங்களேயில்லாத மனைவி இவ்வளவு பேருக்கும். அவன் ஒருவனே ஆதரவாகும்படியா யிற்று. இளம்பிராயத்திலேயே கவலையெனும் உரு[illegible]

ஸாகரத்தில் மூழ்க நேரிட்டது. கடைசியில், வறுமை யின் கொடுமை தாங்கமுடியாமல் "ஊழியஞ் செய் வது செய்கிறோம், தக்க ஊதியத்தோடுதான் செய் வோமே" எனத்துணிந்து, அதிகச்சம்பளங்கள் தாராள மாய்க் கிடைப்பதாகப்பலராலும் பறைபறையப்படும், வெளிநாட்டு வேலைக்குப் போவதாகத் தீர்மானித்து பஸ்ராவுக்குத் தான் போகச் சித்தமாயிருப்பதாகத் தன் மேலதிகாரிக்குத் தெரிவித்தான்.

இச்செய்தி வீட்டில் பரவியதும் அங்குள்ள வெவ்வேறு தலைமுறையைச்சேர்ந்த ஸ்திரீகள், வெவ் வேறுவிதமாய் அதை அங்கீகரித்தனர். எவ்வளவு சொல்லியும் பாட்டிக்கு விஷயம் புரியவில்லை. தாயார் தன் மகன் தூரதேசத்துக்குப் போகக்கூடாதெனத் தடுத்து, தனக்கு வேறொன்றும் வேண்டாம் தன் அருமை மகன் பக்கத்திலேயே இருந்தால் போது மென, அலறினாள். அனுபோகமில்லாத இளம் மனைவி, கணவனை விட்டுப் பிரியமனமில்லாதவளாய்க் கண்களைக் கசக்க ஆரம்பித்தும், மூர்த்திவறுமையால் தான் படுங் கஷ்டங்களை எடுத்துக்காட்டி, பூகோள சித்திரத்தில் 'பஸ்ரா' நமது தேசத்திற்கு எவ்வளவு அருகிலுள்ளதென விளக்கியபோது, தேர்ச்சியடைந் தாள், மேலும் அவ்வூரிலேயே, பலநாளாய் ஏழைக ளாயிருந்த ஒரு குடும்பத்தைச் சேர்ந்த பெண் ஒரு வள் தற்போது தன் கணவன் பஸ்ராவிலிருந்து அனுப்பும் பணத்தால், புதிது புதிதான நகைகளணி

வதையும், தன் கண்முன்னேயே அவள் கண்டிருந்த லால், அவள் மனம் எளிதில் தேர்ச்சிபெற்றது.

தாயின் துக்கத்தைக்கண்டு விசனித்த மூர்த்தி வீட்டில் ஆண்பிள்ளைகளேயில்லாமல் ஸ்திரீகளை மட்டும் விட்டுப்போக மனம் வராது, இதற்கொரு வழி தேடவேண்டுமென நினைத்து, தன் நண்பன் கிட்டுவை வரவழைத்தான். கிட்டுவின் வரலாற்றைக் குறித்து அதிகமாய் விவரிக்கவேண்டியதில்லை. பொருளுதவி யும் அதிகமின்றி, ஆதரிப்பாருக்கும் அதிக சிரமமில் லாதிருக்கும்பொருட்டு, மூர்த்தியுடன் படித்துவந்த கிட்டு, முதல் பரீக்ஷை தேறியவுடன், சர்க்கார் உதவிச் சம்பளம் பெற்று, தஞ்சையிலிருக்கும் வைத்தியப் பள்ளியில் சேர்ந்துவிட்டான். தற்சமயம் அவனும் பரீக்ஷைகள் தேறி, வெளியே உத்தியோகத்திற்குப் புறப்படுங்காலம் கிட்டிற்று.

"குடும்பத்தை உன் வசமே ஒப்புவித்துப் போகலாமென்றிருக்கிறேன்" என்றான் மூர்த்தி. "என் வசமா?" எனக்கேட்டான் கிட்டு. "ஆம். அதில் என்ன தவறு? நீயோ, என்னுடன் கூடவே ஒரே வீட்டில் வளர்ந்தவன், வேற்று மனிதனல்ல".

"அதற்காக நான் சொல்லவில்லை. நானோ ஸர்க் கார் உதவிச்சம்பளம் பெற்றுப் படிப்பவன். அதற்கு ஈடாக சில வருஷங்கள் அவர்களுக்கு ஊழியஞ் செய்யவேண்டும். யுத்தகாலத்தில் எங்கே அனுப்பு

கிறார்களோ, என்னமோ! என்னையும் வெகுதூரத்திற்கப்பால், எல்லைப்புரத்திற்கனுப்பினாலும் அனுப்பிவிடுவார்கள். அப்போது நான் எப்படிக் குடும்பத்தைக் கவனிப்பது" என்றான்.

"அதை நான் யோசிக்காமல் பேசவில்லை. நான் சொல்வதைக் கேள். என் நிலம் விற்ற துகையில் இன்னும் பீதியாயிருக்கும் துகையைக்கொண்டும், மற்றும் சில ஏற்பாடுகள் செய்தும், ஸர்க்காருக்கு உன்பொருட்டு சிலவழிந்த துகையைக் கொடுத்து விட்டு, உன்னை விடுவிக்கும்படி நான் வழிதேடுகிறேன். பிறகு நீ இங்கேயே பக்கத்தில், திருச்சிறைப்பள்ளி போன்ற நகரத்தில், சொந்தத்தில் வைத்தியத் தொழில் செய்துகொண்டு, நான் இப்போது கொடுக்குந் துகையைக் கடனாக பாவித்து, உனக்கு சௌகரியப்பட்டபோது திரும்பிக் கொடுத்துவிடலாம். இதற்கு நீ தடை சொல்லாமல் கட்டாயம் இணங்க வேண்டும்." என மூர்த்தி வேண்ட, "அதில் எவ்வளவோ இடைஞ்சல்கள் இருக்கின்றன. மேலும் நீ அவ்வளவு தூரத்திற்கப்பால், கடலைத்தாண்டி, வேறு நாட்டுக்குப் போவதென்றால் என் மனம் கூசுகிறது" என்றான் கிட்டு. "திரைகடலோடியுந் திரவியந்தேடு" என்றான் மூர்த்தி. "மெஸபடோமியாவின் சீதோஷ்ண நிலைமை எப்படியோ? உன் தேகத்திற்கு அது ஒத்துவரவேண்டும்! என் ஒரு வம்புமில்லாமல், சம்பளம் குறைவாகவிருந்தாலும் இங்கேயே இருந்து,

எல்லோருடனும் 'சிவனே' யென்று, நீ காலங்
கழித்துவரக்கூடாது?" என வினவினான்.

"நீ! இந்த வார்த்தை உன்னிடமிருந்தா வர
வேண்டும். நாம் கட்டிய ஆகாயக்கோட்டைகளை
மறந்துவிட்டு, வறுமையால் வருந்தி, கவலையில்
ஆழ்ந்து, சுகமற்ற நாயோடி வாழ்க்கையில் மூழ்கும
படி, நீயா என்னைத் தூண்டுகிறது! உலகம் முழுதும்
சுற்றுப்பிரயாணம் செய்யவேண்டுமென, நாமிருவரும்
தீர்மானித்ததை மறந்துவிட்டாயா? வேறு ஒரு
காரணமுமில்லாதிருந்தாலுமே, அந்த தேசங்களையும்
பார்க்க வாய்த்திருக்கும், சந்தர்ப்பத்தை நழுவவிடக்
கூடாதென, என்னைத் தூண்டுவதைவிட்டு இங்ஙனம்
பேச ஆரம்பிக்கிறாயே! சிறு பிராயமுதல் "பிரயாண
ஆவேசத்தின்" பரவசத்தில் ஒருங்கே மூழ்கிய நாமே,
ஒருவரையொருவர் தடுக்கமுயலுவது" எனப்
பகன்றான்.

"சரி, அப்படியானால், நீ கூறும் ஏற்பாட்டினா
லேயே, நான் வெளித்தேசங்களுக்குப் போவதைத்
தடுத்து, என்னை குழந்தையைச் செய்வதைப்போல்,
வீட்டிலிருக்கச்செய்யவில்லையா? எனக் கிட்டு கேட்
டான்.

சற்றுப்பொறுத்து, மூர்த்தி "அது உண்மையே.
ஆயினும் எனக்காக நீ உன் ஆற்றலை அடக்கிக்
கொள்ளவேண்டும். என் மனைப்பிடந்தை நிறை

வேற்றும்பொருட்டு, உன் அவாவை நீ கொஞ்சகாலம் அடக்கிவைக்கக்கூடாதா" என அதற்கு பதிலளித்தான் கிட்டு. "கலியாணமாகாவிட்டால், எங்கு வேண்டுமானாலும் திரியலாம், என்னவேண்டுமானாலும் செய்யலாம். கலியாணமான பின்னர் சகலமும் ஒடுங்கி, நமது அவாக்களை அடக்குவதன்றோ முறை."

"என்ன இவ்வண்ணம் பேசுகிறாய். மேனாடுகளில்லவா அந்த முறை—கலியாணத்துடன் சகல ஆட்டபாட்டங்களும் ஒடுங்குவது. நம் தேசத்திலோ கலியாணத்திற்குப் பிறகுதானே எல்லா வாழ்க்கையும். இந்த உண்மை இருதிசையாருடைய புராணங்களிலும், கற்பனைக்கதைகளிலுமிருந்தே தெரியவருமே. மேனாட்டுக்கதைகள் கலியாணத்தோடு முடியும். நம்நாட்டுக் கதைகள் அதிலிருந்தே துடங்கும் — இராமாயணம், மஹாபாரதம், நள சரித்திரம், அரிச்சந்திர புராணம் முதலியவையின் கதாநாயகர்களின், விசேஷ சம்பவங்களும் துணிகரச் செயல்களும், கலியாணத்திற்குப் பின்னரே நேர்ந்தவையன்றோ? இனி இதைக்குறித்துப் பேசுவதில் பயனில்லை. நீ எனக்காக இன்பமற்ற நாடோடி வாழ்க்கையில் மூழ்கி, என்னை விடுவித்து, நான் புதுமைகளைத் தேடிப்போவதற்கு உதவத்தான் வேண்டும். மறுதளிக்கக்கூடாது" என மூர்த்தி வேண்டிக்கொண்டு தர்க்கத்தை முடித்தான்,

# II.

உற்சாகமற்ற மனத்தோடு, தன் நண்பன் குடித்தன பாரத்தை யேற்று, இல்லறவாழ்க்கையிலீடுபட்டு வந்த கிட்டு, வெகு சீக்கிரத்தில், தன் விடுதலைக்காக மூர்த்தியிடமிருந்து பெற்ற கடனைத் தீர்த்துவிடுவதற்கு வேண்டிய பொருள் சம்பாதித்துவிட்டான், அதற்குமேலே கொஞ்சம் பூமியும் தன் கிராமத்திலேயே வாங்கியும் விட்டான். தன் நாடோடி வாழ்க்கையில் கொண்ட அறுவெறுப்பையும் நீக்கிக்கொள்ளவும் ஒருமார்க்கம் புலப்பட்டது. மகாத்மா காந்தியின் இயக்கம் நாடெங்கும் பிரசித்தியாயிற்று. அதில் முழுமனதுடனும் ஈடுபட்டு தன்னாலியன்றமட்டும், தேசிய ஊழியம் செய்துவந்து, தன் உள்ளத்திலுள்ள அதிருப்தியைப் போக்கிக்கொண்டான். மூர்த்தி வெளிநாட்டுக்குச் சென்ற பின் இரண்டு வருஷங்களுக்குள் நொந்த மனதுடன், நண்பனுக்கு உதவிய கிட்டுவின் மனம், தன் வாழ்க்கைப் பயனற்றதென்ற உணர்ச்சியால், உற்சாகமுற்றது. ஆனால் இந்தக் காலத்திலேயே கிட்டுவிற்கு ஒரு துக்க சம்பவமும் நேர்ந்தது. அவன் தாய் இறந்துபோனாள்.

இஃதிங்ஙனமிருக்க, புதுமையையும் விநோத அநுபவங்களையும், தேடிச் சென்ற மூர்த்தியின் வரலாறு, முற்றிலும் அவன் எண்ணியதற்கு மாறாகவேயிருந்தது. பம்பாயில் கப்பலேறிப் பர்மா போய்ச் சேருமட்டும் தனக்கு வாய்த்த சந்தர்ப்பத்தைக்

குறித்து அடிக்கடி சந்தோஷித்து வந்தான். ஆயினும் தன் நண்பனையும் வீட்டிலுள்ளோரையும் விட்டு பிரிந்ததின் நிமித்தம் தன்னைத் தேர்தல் செய்து கொள்ளும்படியும் நேர்ந்தது. பஸ்ரா போயிறங்கினது முதல் அங்கிருக்கும் உணவு கஷ்டமும், குடிப்பதற்கு நல்ல தண்ணீர்கூட கிடைக்காத குறையும், ஊழியத்தால் வரும் மானக் கேடான சில்லறை உபத்திரவங்களும் சேர்ந்து செல்லப்பிள்ளையாய் வளர்ந்து வந்த மூர்த்தியின் மனம் புண்ணாகச் செய்து, தான் தன் நாட்டைவிட்டு வந்த மதியீனத்தையே குறித்து சதா வருந்தும்படி செய்தது. மேலும், மேற்கூறிய கஷ்டங்களாலும், புதிய தேசத்தின் உணவு தண்ணீர் முதலியவையின் பழக்கமின்மையாலும், ஒருநாள்கூட நோவென்பதை அறிந்திராத அவன் தேகமும் சௌக்கியக்குறைவடைந்து மெலிந்தது. அநேகநாள் அங்கேயே ஆஸ்பத்திரியில் கிடக்கும்படி நேர்ந்தது. "பேய்க்கு வாழ்க்கைப்பட்டால், புளியமரத்தில் வசிக்கத்தானே வேண்டும்" நோயால் வருந்தி, கஷ்டங்களால் துன்புற்று, தாய்நாட்டு ஏக்கத்தால்நொந்து, எவ்வளவு வேண்டியும், அதிகாரிகள் அவனை வீட்டிற்கனுப்பிவிட உத்திரவளிக்கவில்லை. புதுமைகளையும் விசேஷ அனுபோகங்களையும், பெற்றுக்களிக்கவேண்டுமென்றும், இன்பங்கலந்த நூதன வாழ்க்கையைத் தேடியும், கடலைக்கடந்து சென்ற மூர்த்தி நாள் முழுதும் தன் கதியைக்கண்டுகரித்து, மதியைச் சபித்து, துக்கக்கடலில் மூழ்க நேரிட்டது.

கடைசியில், சிகிச்சையால் நிவர்த்திக்கக்கூடாத வயிற்றுக்கடுப்பில் சிக்கி, மெலிந்து வருந்தியபோது இனி இக்கருவியால் நமக்கு ஒரு உதவியுமில்லையென யுணர்ந்த அதிகாரிகள், அடியிலிருந்து சாரைப் பிழிந்தபின் எறியும் சக்கையைப்போல் யாத்திரியைக் கப்பலேற்றி, பம்பாயில் கொண்டுவந்தெறிந்தனர்.

இரண்டு வருஷத்திற்குள், பார்ப்போர் கண்டு வியக்கும்படியான கேடாக்கிரமுடையவனாய்ச், சிறு பிரேதம்போல், திரும்பிவந்தபோது, அவன் நண்ப னும், உறவினரும், மற்றுமுள்ளோரும் அவன் அவ ஸ்தைக்குறித்துத் திகிலடைந்தனர். அப்படியும், மனைவி தாய் முதலியோரின் பணிவிடையாலும், நண்ப னுடைய உண்மை சிரத்தையாலும், தெளிவூட்டுந் தாய் நாட்டுவசத்தாலும் வெகுசீக்கிரத்தில் தேர்ச்சி பெற்றான்.

நண்பரிருவரும் தங்கள் தங்கள் வரலாறுகளை ஒருவரோடொருவர் சொல்லிக்கொண்டனர். தான் பட்ட கஷ்டங்களை விஸ்தாரமாகக்கூறி, பொருளீட் டும் ஆவலினால் நம் நாட்டைவிட்டு, அன்னியர்கட் கூலியனாய், அயல்நாடு செல்வதைப்போல் மடத்தன மான செய்கை வேறொன்றுமில்லையென வற்புறுத்தி சுயமதிப்புள்ள மாந்தருக்கு வறுமையால் விளையுங் கேடுகள், சேவகத்தினின்றுண்டாகும் அவமானங்களை விட, சகிப்பதற்கெளிதெனவுரைத்து, நண்பன் வர லாற்றைக்குறித்து வினவினான். "எனக்கு நேர்ந்தது

போலவே எனக்கும் எதிர்பார்த்ததற்கு விரோதமான வாழ்க்கை கிடைத்தது. ஆயினும் இரண்டிற்கும் பெரியதோர் பேதம் என்னவெனில், உருசியற்ற வாழ்வைக் கண்டஞ்சிய எனக்கு, மனக்குறை யொன்றுமில்லை தற்போது" எனக் கிட்டு பதிலளிக்க, மூர்த்தி, "நீ ஏராளமாய் உன் தொழிலினால் சம்பாதிப்பதாகக் கேள்விப்பட்டேன்" எனப் புன்னகையுடன் சொல்ல, கிட்டு "பணத்தைக்குறித்துமட்டுமல்ல. பணமும் ஏராளமாய்க் கிடைத்துவருகிறது ஆனால் —" "வேறென்ன? ஆ! நாம் பால்யத்தில் என்னென்ன எண்ணங்கள் கொண்டிருந்தோம்! மற்றவரைப்போல் சாமானிய வாழ்க்கையில் காலங் கழிப்பதில்லையென்றும் புராணங்களிற்கூறிய வீரர்கள் போல் நடந்தும், கட்டுக்கதைகளில் வரைந்துள்ள துணிகரச்செயல்களை நம் கையால் செய்தும், திக்கு விஜயம் செய்யும் வீரரைப்போல் தினமொருமுறையாவது நமது தைரியத்தை விளக்கியும், கதா நாயகர்களைப்போல் ஏழைகட்காகப் போர்புரிந்தும், நாமெங்கும் புகழ்பெற்றே வாழவேண்டுமென்றும், ஆகாயக் கோட்டைகள் கட்டினோமே! "தோன்றிற் புகழொடு தோன்றுக, வஃதிலார், தோன்றலிற் தோன்றாமை நன்று" எனும் குறளை அடிக்கடி சொல்லிக்கொண்டிருப்போமே! கடைசியில் நாம் செய்வதென்ன":—

"அற்ப பொருளுக்காக நான் நாட்டைவிட்டு, மானத்தை விற்று ஓடினேன்! நீயும், அதே கேவல

மான பொருள் கிடைத்தவுடன், எனக்கொருகுறையு மில்லை என்கிறாய்"! என மூர்த்தி வெளியிட்டான்.

இந்த தற்குறைச்சொல்லை பொறுமையுடன் கேட்டுவந்த கிட்டு, கடைசியில் "நான் சொல்வதைக் கேட்டு சற்று ஆலோசித்துப்பார். பிறகு நான் இந்த அற்ப பணத்தைக்குறித்தா பேசினேன் எனத் தெரிந்துகொள்வாய். நம் தாய்நாடு இழந்த சுதந் திரத்தை மீளவும் பெறுவதற்காகத்துடங்கிய ஒத் துழையாமைப்போரில் நான் ஈடுபட்டிருப்பது உனக் குத் தெரிந்திருக்கும். நாம் சிறுபிராயத்தில் கட்டிய ஆகாயக்கோட்டைகளுக்கு, அசைவிலா அஸ்திவாரம் போட்டதுபோல், அச்செய்கை எனக்குத் தோன்று கிறது. ஒவ்வொன்றாய் விளக்கிச்சொல்லுகிறேன் கவனமாய்க்கேள். சுதந்திரத்திற்காகப் போர்புரிவது சாதாரணமானதல்ல. ஸ்வாராஜ்ஜிய லக்ஷ்மியையிழந்த தாய்க்கு, அதைத்திரும்ப அளிக்க முயலுவது, சிதையையிழந்த இராமபிரான் செய்ததிற்கொத் திருக்கவில்லையா? சத்தியத்தைக் காக்கத் தன் நாடு, நகரம், புதல்வன், மனைவி, அனைத்தையும் தியாகஞ் செய்த, அரிச்சந்திரன் பிறந்த நாட்டில், அத்தகைய மகான்களுக்கு ஒருநாளும் குறைவில்லை. தற்காலத் தில் எவ்வளவு தியாகமூர்த்திகள் இச்சுதந்தரப் போரில் முன் வந்திருக்கின்றனர்! இவ்வியக்கத்தின் பலனைப் நாம் இதுகாறும் மிருகங்களுக்கும் கேவல மாய் நடத்திவந்த 'தீண்டாத ஜாதியாரெனும்"

உடன்பிறந்தாரை, தற்போது சகோதரரெனத் தழுவு வது துணிகரச்செயல் இல்லையா? போர்வன்மையில் வலுத்த ஜெர்மானியரையும் வென்று, உலகெங்கும் தங்கள் கொடியை நாட்டி, ஆயுதச்செறுக்குக் கொண்டு அண்ணாந்து பார்க்கும் ஏகாதிபத்தியத்தை யெதிர்த்து அழிக்கும் வித்தைகளில் நிகரற்று நிற்கும் அவர்களோடு, அஹிம்ஸை என்னும் ஒரு ஆத்மசக்தி யையே ஒரு ஆயுதமாய்க்கொண்டு போர்புரிவதை விட வீரச்செயலுமுண்டோ? நம் நாட்டிலுள்ள வாயற்ற கோடானுகோடிகள் வறுமையால் வருந்தும் கொடுமையைத்தீர்ப்பதே இப்போரில் முனைந்தவரின் மேன்மை நோக்கமல்லவா? கேவலம் ஒரு ஸ்திரீயின் கண்ணீரைத் துடைப்பதைவிட, கோடானுகோடி ஸ்திரீகள் கண்ணீரிலேயே மிதந்து, கருவில் கிடக்கப் பட்ட தாயின் கண்ணீரைத் துடைக்குங் கைங்கர்யத் தில் ஈடுபடுவது மேலன்றோ? கடைசியாய் புகழோடு வாழவேண்டுமென்றிருப்பின், இப்புனித இயக்கத்திற் கலந்து, "பூவோடு நாறும் மணம்பெறும்" என்றது போல், நம் பாரததேவிக்குச் சுதந்திரமாலை சூட்டு வதற்குக் கருவியாயுள்ள மகாத்மாகாந்திபோன்ற அழியாப்புகழுடைய, நறுமணம் வீசும் நாதர்களுடன் சேர்ந்து, உழைப்பதைவிட சிலாக்கியமான வழியும் உளதோ?" என பதிலளித்தான்.

வெகுநேரம் வரையில் மௌனமாயிருந்து கடை சியில், மெல்லிய குரலோடு, மூர்த்தி "உன் சொற்

களின் உண்மையை உணர்ந்தேன். நாம் பால்யத்தில்
கொண்ட மேலான நோக்கங்களை, நான்மட்டுமே
மறந்து காலங்கழித்தேன். உன்போலொத்த, பிறர்
வருத்தத்தை நீக்கவல்ல உபகாரத் தொழிலையுடை
யோர் இத்தகைய அபாயமான துறைகளில் இறங்கு
வதைவிட, என்போன்றவர் துணிவதே நலம்".
"நானும் இதைப்பற்றிச் சிந்திக்கிறேன்" என்றான்.
மறைவிலிருந்து தர்க்கத்தைக் கவனித்துவந்த அவன்
மனைவி "இன்னும் பேச்சு முடியவில்லையா! நேரம்
அதிகம் ஆகிறதே" என்றாள்.

"இதோ முடிந்துவிட்டோம்" என்று அவ
ளுக்கு பதில் அளித்துவிட்டு, கிட்டு, "நீ சொல்லு
வது சரியன்று. சுதந்திர உணர்ச்சி மனமுழுமையுங்
கவர்ந்துள்ளோர் நம் நாட்டில் சிலரேயுளர். ஆகையால்
அவ்வுணர்ச்சியுள்ள ஒவ்வொருவரும் அதிலீடுபடுதல்
அவசியம். ஜட சரீரத்திற்குரிய நோய்களை நிவர்த்
திப்பதற்கு அநேகர் முன் வருவார். அதைப்பற்றிக்
கவலையில்லை" என்றான். "காலத்தின் கொடுமை
யைக் கவனிப்பின் இவ்விபத்திலிறங்குபவர்,
மனைவி மக்களின் இன்பத்தையும் தியாகஞ்செய்ய
நேரிடும்போலிருக்கிறதே?"

"மனைவி மக்களின் க்ஷேமத்தைக்கருதியே நாம்
அவசியம் துணியவேண்டும். நம்மக்களுக்காவது பசி
தீர உண்டிருக்கும் சுகமும், அடிமை வாழ்க்கையி

னின்றும் விடுதலையும் கிட்டவேண்டும். அதுவே நம் முதற் கடமை".

"நமது ஸ்திரீகள், அதற்குத் துணிவார்களா?"
"வெளியே தற்காலத்திய கேவலமாக்கும் பயிற்சிகளால் விளைந்த, உறுதியில்லாத் தோலால் மூடப்பட்டிருந்தும் நம் ஸ்திரீகள் நாடிகளுக்குள், கணவனோடு காட்டிற்கு மாவுரியை உடுத்திச் சென்ற இராஜ குமாரி சீதையின் இரத்தம் குதித்தோடுகிறது. சொல்லின் அஞ்சுவார்கள். ஆனால் ஆபத்து வந்த தருணத்தில் தீரமோடு பிரகாசிப்பார்கள். இதை யெல்லாம் சிந்தித்து நாம் நற்காரியங்கள் துடங்குவதில் தயங்குதல் தவறு. அழிவுடைய மனிதகாயத்தை யுடைய நமக்கு எச்சமயம் எந்த கதி கிடைக்குமோ. நாம் அறிகிலோம். நாளை, நாளை யென்றொதிக்கிவிட்டு பிறகு இப்பிறவியின் பாக்கியத்தை இழக்குந் தருணத்தில் வருந்துவதில் பயனில்லை. செய்வதை உடனே செய்யவேண்டும்.

"நீ சொல்வதும் உண்மையே! வெளிநாட்டில் நான் நோயால் மிக வருந்தியபோது, சரீர அவஸ்தையை விட நம் ஆயுள் வியர்த்தமாயிற்றே எனும் விசாரமே அதிகமாயிருந்தது. துணிதல் அவசியமே. ஆயினும்"—

"போதும், மற்றவைகளை நாளைப் பேசிக் கொள்ளுங்கள். இன்று என்னை நாடகத்திற்கு

தாயாரையும், மனைவியையும் பற்றிக் கவலையோடே இறந்தனையோ" என்றலறினான்.

> "ஆண்டாண்டுதோறும் அழுது புரண்டாலும்
> மாண்டார் வருவரோ"

---

## VIII.

## "பசுவும் பாயும்".

தெய்வ உலகத்திய காமதேனுவின் உருக் கொண்ட பசு, சிருஷ்டிக்கப்பட்ட மிருகங்களனைத்திலும், எங்ஙனம் தன் சாந்த குணத்தினாலும், உபகாரத்தினாலும் விளங்குகிறதோ, அதுபோல் இந்த உலகிலுள்ள தேசங்களுக்குள் நமது பாரத தேசம் விளங்குகின்றது. தன் கன்றுகளுக்காகப் பெருகும் பாலைக்கொண்டு, அவைகளைமட்டுமல்லாது பிறர் பசியையும் தீர்க்கும் இயல்பும் பொறுமையும், சாந்த குணமும் பசுவிற்கென்று ஏற்பட்ட இலக்ஷணங்கள். அவை நமது தாய் நாட்டிற்கும் உரித்தானவை என்பது, இந்து தேச சரித்திர பரிச்சயமுள்ளோர்க்குத் தெரிந்த விஷயமே. தவிற போராசைக்கொண்ட பால் கறப்பவர்கள், பசுவின் முலைக்காம்புகள் புண்ணாகும் வரை கறப்பதை சகியாது, ஒருவேளை அது காலால் உதைக்குமெனும் பயங்கொண்டு அதன் கால்களைக் கட்டுவதுபோல் நம் தாய்நாடும் கட்டுண்டு பல்லாண்டுகளாய் வருந்துவதும் அனைவருக்கும்

சேனைவீரனென்றபடி ஸிக ஜாதியாருடைய படையில் இருந்து, முதலில் ஆங்கிலேயரோடு 'ஸீக்' ஜாதியார் புரிந்த யுத்தங்களில் ஆங்கிலேயரைத் தாக்கியும், பின்னர் அவர்களின் கீழிலேயே, தன் இனத்தார் பலரைப் போலச் சேர்ந்து, அவர்களுக்காக உண்மையாய் உழைத்து வந்தார். தான் உயிர் துறந்த சிப்பாய் கலகத்தில் போருக்குச் செல்லுமுன், சிறுபிராயமாய் இருக்க தன் குழந்தையை மடியில் உட்காரவைத்து " குழந்தாய் ! இவ்வுலகத்திற்கு உரியவர்களாய் இந்த வெள்ளையர்கள் ஆகிவிடுவார்கள். அவர்கள் பெருமை யாவரும் அறிவாரும். ஆகையால், அவர்களை அண்டிப் பிழைப்பதே புத்திமானுடைய செயல். நான் இக் கலகத்தினின்று திரும்பாவிடின், நீ எனக்குப்பதிலாய் ஆங்கிலேயர் படையில் சேர்ந்து, அவர்களுக்கு உண்மை யூழியம் செய்து வருவாய் " என புத்திகூறிச் சென்றார்.

தந்தை சொல்லிய கடைசி வார்த்தைகள் மோஹன்ஸிங் மனதிலாழ்ந்து பதிந்தன. பக்குவமான பருவம் வந்த காலத்தில் இராணுவத்தில் சேர்ந்து, பற்பல தேசங்களுக்குச் சென்று அந்தந்த ஜாதியாரையும், தன் இனத்தார்போல் ஆங்கிலர்க்கு கீழ்ப் படிந்து நடக்கும்படி செய்ய உதவிபுரிந்தார். இறுதியில் மகாயுத்தத்தில் கலந்து, மேனாட்டுக்குச்சென்று அங்கு 'மான்ஸ்' என்னுமிடத்தில் தன் கால் ஒன்றை நழுவவிட்டு பொய்க்காலோடு திரும்ப வீடுவந்து

னையே தேர்ச்சிபெற்று வந்தானேயொழிய, பரீக்ஷை
களில் தேர்வது அரிதாயிருந்தது. ஆயினும், ஒரே
மகனும் விளங்கிய அவன்மீது, அவன் தாய் தந்தை
யருக்கிருந்த பிரியம் கொஞ்சமேனும் குறையவில்லை.

மேனாட்டுப்போரில் காலையிழந்துவந்த ஸோஹறன்
ஸின் வீட்டிற்கு வந்தபின்னர், தன் மகனுடைய
எதிர்கால வாழ்க்கையைக்குறித்து சிந்திக்கலாயினார்.
தன் வமிசவிருத்தியாயுள்ள இராணுவத்தொழிலி
லேயே தன் மகனையும் சேர்க்கவேண்டுமென்று
கருதினார். அதற்கு சந்தர்ப்பமும் சௌகரியமா
யிருந்தது. ஏனெனில், அப்போது கண்ணிற்கெட்
டாத தூரத்திலிருந்து இடி முழங்குவதுபோல் கர்ச்
சிக்கும் ஜர்மன் பீரங்கியிலிருந்து புறப்படும் குண்டு
களுக்குக் காவுகொடுப்பதற்கு, ஆயிரக்கணக்கான
இந்திய வாலிபர்கள் நமது அரசாங்கத்தாருக்குத்
தேவையாயிருந்தது.

ஆனால் ஸோஹறன்ஸின் மனைவிக்குத் தன் மகனை
இராணுவத்தில் சேர்த்து, போர்க்களத்திற்கனுப்பு
வதற்கு, மனம் சகிக்கவில்லை. “ஒரே ஒரு மகனா
யிற்றே, தாங்கள் காலிழந்தாவது உயிருடன் திரும்பி
வந்தீர்கள், நமது மகன் தூரதேசங்களில் உயிர்
துறக்க நேர்ந்துவிட்டால் பிறகு நமக்கு வேறுகதி
ஏது” எனக்கணவனோடு மன்றாடினாள்.

“நமது குலத்திலுதித்த அனைவரும், குருகோவிந்
தர் காலமுதல், இராணுவத்திலேயே இருந்து வந்திரு

அதற்கு ஒரு தீங்கு நேரிட்டால் வமிசமேயற்றுப் போய்விடுமே! பையனுக்காவது, கலியாணம் செய்வித்து, அவன் மூலியமாகவாவது நமது சந்ததி விருத்தியாவதாயிருப்பினும் பாதகமில்லை! நான் சொல்வதைச்சற்றுக்கேளுங்கள். மகனுக்கு விவாகம் முடித்துவைப்போம். பிறகு அவனுக்கென்று ஒரு சந்ததி உற்பத்தியானபிறகு, அவனை எங்கு வேண்டுமானாலும் அனுப்புங்கள். அதற்குள் இந்தக் கொடும்போரும் நின்றுவிடும்" என மன்றாடினாள்.

"இந்த சந்தர்ப்பத்தை நழுவவிடக்கூடாது. இதுவே நமது மகன் நல்லபதவிக்கு வரக்கூடிய தருணம்" என்று பிடிவாதமாய்ச்சொல்லி, பஞ்சாப் அதிகாரிகள் இராணுவத்தில் ஜனங்கள் சேரும்படி தூண்டுவதற்காக பிரசுரித்த பலவிளம்பரங்களை எடுத்துக்காட்டினார். ஒன்றிலும் மனத்தேர்ச்சியடையாத மீனாவியின் மனதை, ஒருவாறு திருப்திசெய்யும் பொருட்டு, அந்த இந்திரஸிங், சிறுபிராயம் முதல் நேசித்துவந்த, அழகும் புத்தியும் வாய்ந்த, ஒரு அமிர்தஸரஸ் நகரத்திய பெண்ணை, அவனுக்கு விவாகம் முடித்துவைத்தார். வீட்டுவேலைகள் சரிவரச்செய்ய அறியாதவளாயும் நகரவாழ்க்கை நாகரிகத்தில் வளர்ந்துவந்த அச்சிறுமியிடம், அவள் மாமியாருக்கு, அதிகதிருப்தியில்லாவிடினும், இளந்தம்பதிகளிருவரும், ஒருவரையொருவர் மிகுந்த பிரியத்தோடு நேசிப்பதைக்கண்டு மகிழ்ந்தாள்.

கலியாணமாய் நாலைந்து மாதங்களாயின. தன் தாய் வீட்டிற்குச் சென்று, அங்குள்ளோரைக் காண வேண்டுமெனும் அவாவினால், தன் கணவன் இந்திரஸிங்கிடம் சொல்லி, இருவரும் வைகாசி உத்ஸவத்திற்கு அமிர்தஸரஸ் போகலாமெனத் தெரிவித்தாள். அதற்கிணங்கி, இந்திரஸிங்கும் தன் பெற்றோரிடம் அனுமதி கேட்டான்.

"அப்படியே போய் வாருங்கள்" எனத் தாய் விடைகொடுத்தாள். ஸோஹன்ஸிங்கோ இதுவேயல்ல தருணம் என்றெண்ணி, நானும் உங்களுடன் வருகிறேன்'' என்றார். "பையனைப் பட்டாளத்தில் சேர்த்துவிடவா? எனத் திடுக்கிட்டுக் கேட்க,

ஸோஹன் "என்ன இவ்வளவு பயப்படுகிறாய் நானும் அமிர்தஸரஸுக்குச் சென்றேனானால் அங்கு நான் முன்னொரு காலத்தில் பெரிய அபாயத்தில் இருந்து காப்பாற்றிய ஒரு படைத்தலைவர் தற்போது இருக்கிறார். அவரிடம் நமது பையனைப்பற்றி ஒரு வார்த்தை போட்டுவைக்கலாமென்றெண்ணுகிறேன். இப்போதில்லாவிடினும், பிறகாவது நம் பையனுக்கு அது உதவியாய் இருக்கும்" என்று சொல்லி, தனக்குள்ளேயே "ஏது இவள் மனம் எளிதில் தேர்ச்சி அடையாதுபோலும். இவளுக்குத் தெரியாமலே காரியத்தை முடிக்கவேண்டும். பிறகு தானே தேற்றிக் கொள்வாள்" என ஆலோசித்தான்.

"ஆறாயிரம் மைலுக்கப்பாலுள்ள போர்க் களத்திற்கு, நமது ஒரே மகனை அனுப்பி, நம் இனத்தாரோடு உறவேயின்றி, நமது ராஜாங்கத்தையும் கைப்பற்றியுள்ளவர்க்கு, உதவி புரிய ஏன் இப்படி துடிக்கிறீர்களோ, தெரியவில்லை! அரசாங்கத்தார் இதற்கென்ன கைம்மாறு உங்களுக்களிக்கப்போகிறார்களோ!" என வியந்தாள். "அரசாங்கத்தார், நம்மிடத்தும், நம்மினத்தாரிடத்தும், காட்டியுள்ள பட்சத்திற்குக் குறைவேயில்லை. தவிர சர்க்கார் உப்பைத் தின்ற நாம், அவர்கள் ஆபத்து காலங்களில், உதவாதிருப்பது, நன்றிகெட்ட குணம்" என பதிலளித்தார் ஸோஹன்ஸிங். இந்திரஸிங் மெதுவாய் "நமக்களித்த உப்பு யார் யார் பணத்தைக்கொண்டு வாங்கியது. தானே நம் நாட்டினர் குடிக்கக் கஞ்சியின்றி, பஞ்சங்களிலடிபட்டிறக்க, பை, பையாக ரூபாயை நம்மிடமிருந்து கசக்கி, அதில் ஒரு சிறு பாகத்திற்கு உப்பைவாங்கி நமக்கிறைத்தால் அதற்காக"

"போதும், போதும்! ஒகோ! இந்த விஷயங்களெல்லாம் அமிர்தஸரஸில் கற்றுக்கொண்டாயோ? படிப்பு வராவிட்டாலும் நம் பிள்ளைகளுக்கு இந்த நாளில், வெகு சீக்கிரத்தில், முன்னேற்றத்திற்கு விரோதமாயுள்ள வழிகளில் இறங்குவதற்குத் தெரிந்துவிடுகிறது! எனக்கும், எனக்குமுன் என் தகப்பனுக்கும் தெரியாத புதுமைகளை நீ, நாலு வார்த்தை இங்கிலீஷ் படித்தவுடன் கண்டுவிட்டாயோ!" எனக் கோபித்தார்.

யாவரும் அமிர்தஸரஸுக்குச் சென்றார்கள். ஸோஹன் தான் நீண்ட நாளாய் உயிரைப் பொருட்படுத்தாமல் செய்த ஊழியத்திற்குப் பரிசாய்ப் பெற்ற தன் பழைய மெடல்களையும், பலவர்ண படாக்களையும் அணிந்து, தனது தளகர்த்தரிடம் சென்று, தன் மகனைக் குறித்து சிபார்சு செய்தார். அவரும் பையன் இராணுவத்தில் பதிவான பின், தன்னாலியன்ற உதவி புரிந்து, அவனைச் சீக்கிரத்தில் மேல் பதவிக்குக் கொண்டு வருவதாக வாக்களித்தார். ஸோஹன்லின், அங்கிருந்த சில தோழர் வீட்டிற்கு விருந்தாளியாகச் சென்றார். தன் மாமனார் வீட்டில் மனைவியை விடுத்து, ஊரிலுள்ள தனது தோழர்களைப் பார்த்துவரச் சென்ற, இந்திரஸிங், மாலை தன் வீடு நோக்கி வந்துகொண்டிருந்தான். வரும் வழியில் தன் வீட்டிற்கருகில் திரள், திரளாய் ஜனங்கள் போவதைக் கண்டு, உள்ளே சென்று தன் மனைவியிடம் “ஜனங்கள் கூட்டங் கூட்டமாய் எங்கே போகிறார்கள்” எனக் கேட்டான். அவள் “பக்கத்தில் காலி நிலத்தில் பொதுக் கூட்டம் கூடுகிறார்களாம்” என்று பதிலளிக்க “நான் போய்ப் பார்த்து வருகிறேன்” என்று சொல்லி மறுபடியும் வெளிக்கிளம்பினான்.

“ஜாலியன் வாலா பாக்” எனும் கொலைக்களத்தில், ஆயிரக்கணக்கான ஜனங்கள், ஒருபாவமுமறியாதவர்கள், கூட்டங்கூடியிருக்கும் போது, நிராயுதபாணிகளாய் ஒரு தீங்கையும் எதிர்பாராதிருக்க, அந்த ஏழைகளின் மேல், ஒரு எச்சரிக்கையுமின்றி, கொஞ்ச

மேனும் இரக்கம் பச்சாதாபம் என்பதின்றி, தம் வெடி மருந்து தீரும் வரை, சுட்டு வீழ்த்திய கொடுமை, இப்போது தெரியாதவர்கள் இல்லை! என்ன நடக்கிறதென்று பார்ப்போமென்று, சென்று கூட்டத்தின் ஓரத்தில் நின்றுகொண்டிருந்த இந்திரஸிங் பக்கத்திலிருந்தே, அந்த மனிதவேட்டை தொடங்கியதால் ஒரு விஷயமுமறியாத அவன், சீக்கிரத்தில் அடிபட்டுக்கீழே விழுந்தான்.

சிப்பாய்கள் சுட்டுவிட்டு, மேற்கொண்டு சுடுவதற்கு, வெடிமருந்து குண்டு, இல்லாமையால் அவ்விடத்தை விட்டகன்றார்கள்.

அதற்குள் பட்டணமுழுதும், இந்த கோரச் செய்கையின் செய்தி பரவியது. வீடுகள் தோறும் தலைவிரிகோலமாய் தவிக்கிறவர்களும், தங்கள் உற்றார் உறவினர் பெயர்களை அழைத்துக் கதறுகிறவர்களுமாய் இருந்தது. ஆனல் தெருக்களில் நடமாடுவோரின்றி பாராக்கார சிப்பாய்கள் உலாவுபவர்களைத் தவிர வேறுயாரும் அசையாமல், பட்டணம் இழவு கோலங் கொண்டிருந்தது. இராணுவ அதிகாரிகள் இராணுவச் சட்டத்தைப் பிறப்பித்து, தெருக்களில் ஒருவரும் நடமாடக்கூடாதென்றும், உத்திரவு செய்திருந்தனர். தங்களுக்குயிருக்குயிராயுள்ள உறவினரின் கதியை அறிந்துகொள்ளும் அவாவினல் இவ்வுத்திரவை மீறி நடப்போர், சொல்பதூரம் செல்வதற்குள் பாராக்காரச் சிப்பாய்களின் சுட்டிகளால்

குத்துண்டு அலறிய சப்தமும், மைதானத்தில் குத்துயிராய்க்கிடந்து வருந்துவோரின் ஈனத்தொனி புலம்பல்களும், இன்னும் நம் நாட்டவர் காதிலேயே சுழன்றுகொண்டிருக்கின்றன.

தன் கணவன் கதி என்னவாயிற்றோ வென அனலிலிட்ட புழுப்போல் துடிதுடித்துக்கொண்டிருந்த சிறுமி, வெகுநேரமாயும் இந்திரனின் திருப்பாதங்களைக் கண்டு களைசியில் மனஞ்சகியாதவளாய், வெளிக் கிளம்பி, ஜாலியன் வாலா பாக்கை நோக்கி ஓடினாள். இதற்குள் இருட்டாகி விட்டது. ஓடுகிற உருவத்தைக் கண்டு 'சுடுவேன்' 'குத்துவேன்' 'நில்' என்றதட்டிய சிப்பாய்களின் வார்த்தைகளையும், எச்சரிக்கைகளையும், ஆயுதங்களையும், எள்ளளவேனும் மதியாது தன் கணவன் கதியை உணரவேண்டுமென்னும் ஒரே நோக்கத்திலேயே மனம் நாடியவளாய் ஓடினாள். கற்பிற்கு பிறப்பிடமாயுள்ள நம் பரதகண்டத்திய மாதுசிரோன்மணி யொருவள், தன் கணவனுக்குற்ற ஆபத்துக்காலத்தில், அவனுக்குதவியாய், அருகில் செல்ல முயலுகையில் சேவலும் தேவர்களாலேயே அவளைத்தடுக்க முடியாதென்றால்; மிருக பலமும், ஆயுதசக்தியும், இராணுவச்சட்டமுமா அவளைத் தடுக்க இயலும்!

அந்த மைதானத்தில் குவியல்களாய்ப் பிணங்களும், புண்பட்டவர்களும், மரண தாகத்தால் 'தண்ணீரென்று' முனகிக்கொண்டு கிடப்பவர்களும், கை

போனவர்களும், கால்போனவர்களும், கண்போனவர்களும் கிடப்பதைக்கண்டு திகைத்து, தன் கணவனை இவ்விருள் சூழ்ந்த இடத்தில் எப்படித் தேடிப்பிடிப்பதெனத்திகைத்து நின்றாள். நல்லவேளையாய், பாராக்காரசிப்பாய்களை மேல்பார்வை செய்வதற்காக, ஒரு இராணுவ அதிகாரி அங்கு தன் மோட்டார்காரில் வர, அதன் வெளிச்சத்தால் தன் காலுக்கடியிலேயே சுரணையற்றுக்கிடக்கும் இந்திரஸிங்கைக் கண்டு உடனே குனிந்து, அவனை, மேலே விழுந்து கிடந்த பிணங்களினின்றும் விடுவித்து, தன் மடிமேல் அவன் தலையை வைத்து, உயிர்ச்சின்னமேதேனுமிருக்கிறதாவென, நெஞ்சு படபடவெனத்துடிக்க, கவனித்தாள். மெதுவாய் சுவாசம விடுவதை உணர்ந்து பரம சந்தோஷமடைந்தாள்.

மேலிருந்த பிணப்பாரம் நீங்கவே, சற்றுத் தெளிந்த இந்திரஸிங், தன் நினைவு வாராமலே, வறண்ட தன் நாக்கினாலும், காய்ந்த தன் உதட்டினாலும் "தண்ணீர், தண்ணீர்" என்று முனக வாரம்பித்தான். அவன் இன்னது கேட்கிறானென்று தெரியாவிடினும், தண்ணீராய்த்தானிருக்க வேண்டுமென்றெண்ணி, கொஞ்சம் கொண்டுவரலாமென்றெழுந்தாள் அவன் மனைவி. இவள் எழுந்தவுடன் அதைக் கண்ட இராணுவ உத்தியோகஸ்தர் "அது யார்" என்றதட்ட, அங்கிருந்த சிப்பாய் "யாரோ தெரியவில்லை. அந்த ஆஸாமியைத்தான் நான் தூக்கிக்கொண்டுவந்தேன்." என, பதிலளித்தான்

"தூக்கிக்கொண்டு வந்தாயா! வெளியே இருந்து ஒருவரும் இங்கு நுழையக்கூடாதெனக் கண்டிப்பான உத்திரவு இருக்கும்போது, தூக்கிக் கொண்டுவந்தேன், இருந்தேனென்றெல்லாம் கதை படிக்கிறாயே! துப்பாக்கியும் தடியும் எதற்காக வைத்திருக்கிறாய்! ஊன்றுகோல்போல், நிற்பதற்கு உதவியாய் வைத்திருக்கிறாயா! வெளியே துரத்து அந்தப் பேர் வழியை! வேறே ஒருவரையும் உள்ளேவிடாதே! உஷாராயிரு! யாராவது உன் உத்திரவை மீறினால், உடனே சனியனைக்குத்து!" என்று சொல்லிவிட்டு வெள்ளை அதிகாரி சென்றார்.

மோட்டார் போனவுடனே இருள் அதிகமாக தன்கணவனை தனியே விடுத்துச் செல்வதற்கு மனம் சகியாதவளாய்ச் சற்று அச்சிறுமி தயங்க இந்திரஸிங்கும் முனக ஆரம்பித்தான். என்ன சொல்லுகிறார் என, கவனிப்பதற்காக, குனிந்தாள் அப்பெண்.

அதே தருணத்தில், ஒருவேளை பெண்ணொருவளோ என்று தயங்கி, இதுகாறுமிருந்த சிப்பாய் மேலதிகாரியின் உத்திரவின் பிறகு இனித்தாமதிக்கக் கூடாதென, தடியால் காலில் குத்தலாமென, நீட்டி. "போ! போ! இங்கு நில்லாதே" எனக் குத்தினான் அவள் குனிந்ததற்கும், இவன் நீட்டியதற்கும், சரியாயிருந்தது. அவள் கழுத்தில் குத்தி விட்டான். உடனே இரத்தம் பெருகி சிதற ஆரம்பித்தது. சிதறிய இரத்தம் இந்திரஸிங் முகத்தில்

விழ, மரணாவஸ்தையில், காவரட்சியால் தவித்துக் கொண்டிருந்த அவன் தண்ணீரென்றெண்ணி, உதடு களைச்சேர்த்து, உருஞ்சி, பெருமூச்செறிந்தான். அப்பெருமூச்சே அவன் இறுதி சுவாசமாயிருந்தது.

அதற்குள்ளாக, விருந்திலிருந்து வீடுவந்து சேர்ந்த லோஹன்லின், விஷயங்களைக் கேள்வியுற்று உடனே மனம் பதைக்க, தானும் அவ்விடத்தை நோக்கி விரைந்தான்.

தன் மருமகளைப்போலவே தானும், எச்சரிக்கை களைப்பொருட்படுத்தாது ஓடியும், தான் ஒரு காலிழந் ததின் நிமித்தம், விரைந்தோடமுடியவில்லை. பின்னே தூரத்தில் வந்த சிப்பாய், அவரை விலாவில் இலே சாய் குத்தினன். குத்து இலேசானதாய் இருப்பினும் ஈட்டியின் முனையில், இவருடைய சட்டையும் அதி லிருந்த மெடல்களின் வளையமும் நாடாவும் சிக்கிக் கொள்ள, குறவன் முள்ளிலகப்பட்ட அணில்போல அசையமுடியாது இருக்கலாயிற்று. உடனே இரண்டு சிப்பாய்கள் அவரை இறுகப்பிடித்துக் கொண்டார்கள்.

தன் கழுத்திலிருந்து இரத்தம் சிந்திய அதே தருணத்தில் தன் மாமனர், மரக்கால் ஓசையைக் கேட்டாள். பிறகு சிப்பாய்கள் கையில் அவர் சிக்கிய உடன் "இந்திரா! இந்திரா! குழந்தாய்" என்று அவர் அலறும்போது, இரத்தப் பெருக்கினால், அவள்

கேட்ட கேள்வி, ஞாபகத்துக்குவர, வெறிகொண்ட வனைப்போலாவேசங்கொண்டு ஸோஹன்ஸிங் தனது மெடல்களைப் பிடுங்கி யெடுத்து, அந்த 'டையர்' என்னும் தளகர்த்தர் முகத்தில் எறிந்து "இதோ உங்கள் பரிசுகளை நீங்களே வைத்துக்கொள்ளுங்கள்! உன்னுடைய டம்பம் சகியாது உன்னைக் குத்தவந்த பாரஸீகர்களிடமிருந்து நான் தப்புவித்ததற்கு பதிலுபகாரமாய் என் ஒரே மகனை நீ கொன்றாய்! பாவி! என அவர்மேல் பாய்ந்தார்.

அங்கிருந்தவர்கள் உஷாராயிருந்து அவரை உடனே கட்டிப் பிடித்து விட்டதாலேயே இன்னும் டையர் துரை அவர்கள் நமது நாட்டிலிருந்துவரும் பென்ஷன் பணத்தைப் பெற்று சௌக்கியமாய் வாழ்ந்து வருகிறார்.

ஆனால் தன் கணவன் மேலிருந்த பிரியத்தால் தன்உயிரைத் துரும்பாய் எண்ணி இந்திரஸிங்கோடு உடன்கட்டை ஏறிய அச்சிறுமியின் மனோதைரியமும், தியாகமும் வீணாகவில்லை. நம் நாட்டு கற்புடைய மாதரின் கீர்த்தியை இன்னுமொருமுறை எடுத்துக் காட்டிற்று. அன்புடையோருக்கு நாம் உதவி புரியச் செல்லும்போது குறுக்கிடும் இடையூறுகளால் நாம் தடையுறக் கூடாதெனவும் விளக்கிற்று.

கடைசியாய் தலைமுறை தலைமுறையாய் போர்க்களத்தில் வாசனை விடாத குலத்தில் பிறந்து, தன்

வாழ்நாளில் பெரும் பங்கை இராணுவத்தில் கழித்த ஸோஹன் ஸிங்குக்கும், ஸாத்விகப் போர் புரிவோருடைய மனோதிடத்தின் வலிமையை விளக்கி அதன் மேன்மையையும் சிறப்பித்தது.

ஆயிரக்கணக்கான அகாலி ஸீக்கியர்கள் தங்கள் கொள்கைக்காக சிறைவாஸத்தை சிரிப்புடன் ஏற்க முன்வந்தபோது முதல் முதல்வந்த அகாலிய ஜதைக்குள் மாக்கால் ஸோஹன் ஸிங் முதன்மையாயிருந்ததும் அச்சரியமா !

நம் நாட்டின் துயரத்தை நீக்குவதற்கெனச் செய்யும் முயற்சிகளில் ஈடுபடத் தூண்டுவதற்கு ஸோஹன் ஸிங்குக்கு நேர்ந்த துக்க சம்பவத்தைப் போல் வேறெவருக்கும் நேராதிருக்கட்டும் !

---

# IX.

## சகோதரத்துவம்

சென்னை மாகாணத்திலுள்ள மற்றைய பெரிய நகரங்களுள் இல்லாத ஒரு விசேடம் திரிசிரபுரம் எனும் நகரத்திற்கு உளது. நம் நாட்டிலுள்ளோர் வெவ்வேறு மதத்தினராயினும், ஒத்துமையோடு வாழும் இயல்புடையர் என்பதற்கும், மதங்கள் வேறுபட்டிருப்பினும் மானிடப் பிறவியின் மேன்மையுணர்ந்த ஒவ்வொருவருக்கும் மதத்துவேஷம்பாராட்டிப் பிறமதங்களைச்சார்ந்தோரை இம்ஸிப்பதை எந்தப் பெரியமதமும ஆதரிக்கவில்லை, என்பதற்கும், ஓர் அத்தாட்சியாய், திருச்சிநகரில், ஹிந்துக்கள், மகம்மதியர்கள், கிறிஸ்தவர்கள், அனைவரும் ஆயிரக்கணக்கானவர், பலதலைமுறைகளாய் வாழ்ந்து வருவதைக் காணலாம். சோழநாட்டிற்கு தலைநகராய் விளங்கும் உறையூரின் நிமித்தமும், ஆலயங்களின் சிறப்பாலும், ஹிந்துக்களுக்கும், கர்நாடக நவாப்புக்களின் வாசஸ்தலமாய், சொல்ப வருஷங்களுக்குமுன் வரை இருந்ததாலும், நத்தர்ஸா எனும் "வலி," யடங்கியிருத்தலாலும், இஸ்லாமானவர்களுக்கும் பரதகண்டத்தில் கிறிஸ்தவர்கள் ஆட்சிமுறைவலுக்கு முன்னமேயே தொட்டு, கிறிஸ்துவமதம் வேரூன்றி நின்றதாலும், அக்காலத்தில் அரசர்களின் துவேஷமிலா மதத்தாங்கலால் ஏற்பட்ட பெரியமாதாக்கோயில்கள் நிரம்பியிருத்தலால் கிறிஸ்தவர்களுக்கும், இம்மா நகரில் அதிக பற்றுண்டு.

மதங்கள் வேறுபடினும் நடை, உடை பாவனை களிலும் பழக்க வழக்கங்களிலும், வேற்றுமையின்றி வாழ்ந்துவரும் கிறிஸ்தவர்களுக்குள், ஒரு பெரிய குடும்பம் இருந்தது. தொன்று தொட்டு அந்தக் குடும்பத்தாருக்கு பட்டயக்காரர்களென்ற பெயர் வழங்கிவந்தது. பல்லாண்டுகளுக்குமுன். தமிழில் வெகுதேர்ச்சிபடைத்து. ஒழுக்கத்தாலும் மகானாய் விளங்கிய. ஒரு கிறிஸ்தவதுறவி. தனக்கு தமிழ் பாஷைக்கு, குருவாயிருந்த பட்டயக்காரனுக்கு தன் மதத்திலுள்ள மேன்மைகளை போதித்து, தன் மதத்தில் சேர்த்துக்கொண்டார். உயர்ந்த வேளாளர் குலத்தில் பிறந்த, சீமான் பட்டயக்காரரின் செல்வாக்கினாலேயே, அந்த நகரில் அந்தமதம் நிலைபெற்றதெனச் சொல்லவேண்டும். மதம் வேறுபடினும் அந்தக்குடும்பத்தின் செல்வாக்குக் குறையவில்லை. அவர்களும் வேற்றுமையின்றிப் பந்துக்கள் பாசத்துடன் வாழ்ந்து வந்தனர்.

உலகத்தையும் அண்டகோளங்களையும் படைத்த, ஆதிகடவுள், அனைவருக்கும் தந்தையாய் விளங்குவதால், மானிடப்பிறவியெய்த அனைவரும் சகோதரர்களாவார் எனும் உணர்ச்சி ஒவ்வொருமார்க்கத்தினருக்கும் இருக்கவேண்டியிருப்பினும், நம் இந்து மதத்திலுள்ள சில புராண ஆதாரங்களாலும், பழக்கத்திலிருக்கும் சில கொடிய விதிகளின் ஆதாவால் நம்மில் சிலரை கீழ்ஜாதியாரென்றும், தீண்டாதவர்க

என்றும், நாம் ஒதுக்கிவைத்து, அவர்களை மிருகங்களுக்கும் கேவலமாய் மதிப்பது உலகமறிந்தவிஷயம். அஹிம்ஸாதர்மத்தை உலகத்தாருக்கு ஊட்டி படையெடுத்து கைப்பற்றிய நாட்டினரைக் கத்திக்கிரையாக்காமலும், அடிமைகளாக்காமலும் கொன்று கொட்டி நடந்துவந்த சாந்தகுணமும், நன்னெறியுமுடைய ஹிந்துமதத்தினர்மீது, சாற்றக்கூடிய பழி இது ஒன்றே. தத்துவ ஆராய்ச்சியிலும், தர்க்க விசாரணையிலும் சிறந்த தனது குளிர்ந்த ஒளியை, உலகத்தார் பொருட்டு வீசும் சந்திரன்போன்ற, நமது மதத்திலன் தோன்றும் களங்கமும் இதுவேயாகும்! இக்குறையைக்களையின், பிறைபொழிந்து களங்கமின்றி ஒளிக்கும், பூரணசந்திரனைப்போல் நமது ஹிந்து மதமும் பிரகாசித்து விளங்குமென்பதற்கு, கோடானு கோடி ஜனங்களால் கொண்டாடப்படும். இக்களங்கமற்ற புத்தமதமே ஓர் அடையாளம்.

மானிடரின் சகோதரத்துவத்தையே, அடிப்படையாயுள்ள கிறிஸ்து மதத்தில் சேர்ந்தும், பழக்கவழக்கங்கள் மாறுததால் திருச்சியிலுள்ள கிறிஸ்தவர்க்குள்ளும், ஜாதிவேற்றுமைகளும் தாழ்ந்த ஜாதியாரெனப்படுவோரிடம் கொடுமை புரிவதும் குறைவன்றியிருக்கது. கோயில்களிலுங்கூட அவர்கள் மற்றவர்களோடு சமமாய் அருகில் உட்காரக்கூடாதென அவர்களுக்கு பிரத்தியேகமான இடமளித்து பிரித்து வைத்திருக்கின்றனர், ஜாதிபேதமே பார

களுள் தாழ்ந்த ஜாதியாரெனப்படுவோரிடமே முத
லில் பரவிற்று. கிறிஸ்து மதத்தில் சேர்ந்தும் தங்கள்
பிறப்பின் பலனாய் தங்களுக்குண்டான தாழ்மையை
நீக்கொணாததைக் கண்டு கலங்கினர். சமத்துவம்
பாராட்டின மதத்தில் அதிலும் அனைவருக்கும் தந்தை
யாய் விளங்கும் கடவுள் உருவத்தின் சன்னிதானத்தி
லேயே தங்களை ஒதுக்கிவைப்பானேனென்றும் தங்
களுக்கும் மற்றைய இனத்தாருக்கும் இடையில்
மாக்கிராதிகள் எதற்கென்றும் பள்ளர், பறையோர்
கிளர்ச்சி செயலாயினர்.

ஆனால் வேளாளர் முதலிய குலத்திற் பிறந்த
ஏனைய கிறிஸ்தவர்கள் அவர்களுடன் கலக்க சம்ம
திக்கவில்லை. தங்களுள் செல்வாக்குடைய பட்
டையக்காரர் போன்றவர்களின் மூலமாய் தாங்கள்
கீழ் ஜாதியாரோடுகலக்க இசையோமென்றும் அதை
பாதிரிமார்கள் அங்கீகரிக்காவிடின் தாங்கள் பிரத்தி
யேகமான கோயில் கட்டிக்கொள்வதாயும் தீர்மான
மாய் தெரிவித்துவிட்டார்கள். இதுகண்ட பாதிரி
மாரும் செல்வாக்குடைய மேன் ஜாதியாரின் ஆத
ரவை இழக்க மனமில்லாதவர்களாய் தங்களுக்கு
நியாயமென்று புலப்படும் ஏழைக்கட்சியாரை யடக்கி
வந்தனர். ஆனால் ஒருவிசை உதித்த சமத்துவ
உணர்ச்சி ஒருபோதும் அடங்கிவிடாதாகையால் பள்
ளர், பறையர் எனும் குலங்களில் தோன்றிய ஆதித்
திராவிடரின் ஊக்கம் குன்றாது உள்ளுறே நின்று

புகைந்துகொண்டிருந்தது. செல்வமும் செல்வாக்கு முடைய மற்றைய ஜாதியாரனைவரும் தங்களை பலவாறு துன்புறுத்துவாரென்றஞ்சியும் அவர்களுடன் சேர்ந்த பாதிரிமார்களின் கோரிக்கைப்படி விரோதமாய் நடந்துகொண்டால் தங்களை அவர்கள், 'விலக்கிவிடுவார்கள்' எனும் பயத்தாலும் பட்டையக்காரர் போன்ற பெரிய மிராசுதார்கள் தங்கள் பிழைப்பளிப்பவர் முகதாட்சண்ணியத்திற்காகவும் தங்கள் ஆத்திரத்தையும் அடக்கி வெளிக்காட்டாதிருந்தனர். சிலர், பாதிரிமார்களின் பட்சபாதத்தினால் மனம் நொந்து, தங்கள் நிலைமைக்கண்டு வருந்தி, சமத்துவம் பாராட்டும் இஸ்லாம் மதத்திற்போய்ச் சேர்ந்துவிட்டனர். ஆதித்திராவிடர்களுக்குள் முக்கியமாய் மோஸஸ் என்று ஒருவாலிபனிருந்தான். தன் புத்திகூர்மையாலும் தனது கற்றறிவினாலேயும், அவனே அவர்களுக்குள் தலைவனாகி விளங்கினான். வேளாண்மைத்தொழிலையே நம்பியிராது, வேறு இயந்திர நடாத்தும் தொழிலும் கற்றவனாதலால், அவனே அவர்களுள் மற்றவனைக்காட்டிலும் சுயஅறிவு முடையவனாயிருந்தான். மற்றை இனத்தாரின் குறுகிய நெஞ்சத்தாலும், துறவிகளாய் விளங்கும் பாதிரிமார்களின் மேன்மையிலா பட்சபாதத்தினாலும் மனம் நொந்தவனாயும், தங்களுக்கு மேலிருப்பவரோடு சமத்துவம் பாராட்டமுயன்று, தங்களுக்குக் கீழிருப்பவரை வருத்துவதில் சளைக்காது நிற்கும் ' சியபக்கட்சியார் " பெரும்பாலரின் மனப்பாங்

யைக்கண்டு வெறுத்தவனும், தாங்கள் பிடித்த பிடியையே நழுவாது காக்கவேண்டுமெனும் ஊக்க முடைய, ஸிபாஸ்டினுடைய முயற்சியினாலேயே மற்ற கிறிஸ்தவ ஆதித்திராவிடரும் "மஜ்லிஸில் உலேமா" எனும் புதிய இஸ்லாம் மார்க்கத்திய சங்கத்தாரின் கிளர்ச்சியால், கிறிஸ்துமதத்தைவிட்டு விலகாதபடி தடுக்கப்பட்டனர்.

ஒரு ஞாயிற்றுக்கிழமை, பட்டயக்காரர் தன் கிராமத்திற்குச்சென்று, இருந்ததால், தான் வழக்கமாய் தொழுவதற்கேகும் "இரக்ஷகர்" கோயிலுக்குப்போகவில்லை அன்று அங்கே ஒரு சிறு சச்சரவு நேர்ந்து விட்டது. தாழ்ந்த வகுப்பினர்க் கென்று தடுக்கப்பட்டிருந்த இடத்திலிருந்த ஒரு ஸ்திரீ மற்ற ஸ்திரீகளுடன் பேசிக்கொண்டிருக்கையில், அவளுடைய குழந்தை, ஆறேழு வயதுள்ள பையன், ஜாதிவேற்றுமைகளின் கொடிய விதிகளை நன்குணராத பாலகன், கிராதியின் சந்தின்வழியே நுழைந்துவந்துவிட்டான். இதுகண்ட ஒரு வேளாள ஸ்திரீ "பிள்ளையைக் கவனிக்காமல், யாருடன் வார்த்தையாடிக்கொண்டிருக்கிறாய், ஊர்வம்பு பேசுவதற்காகவா கோயிலுக்கு வந்தாய்? என்று பிள்ளையின் தாயைச்சினக்க, பிள்ளையை அருகே அழைத்து அவள் "என்ன குற்றம் செய்துவிட்டான் அக் குழந்தை? இவ்வளவு கோபமெதற்கு" என்று பதிலளிக்க, வேளாளஸ்திரீ "உங்களுக்கென்று தனி

யான இடம் அமைத்திருக்கும்போது, எங்களிடத்தில் புகுந்து, எங்கள்மீதுவிழுந்து ஓடும்படி பிள்ளையை விடுத்ததுமில்லாமல், எதிர்த்தும் வாக்குவாதம் செய்யத்தொடங்கிவிட்டாயோ? இன்னொருவிசை இங்கு வரட்டும் அந்தப்பயல் 'சுடச்சுட முதுகிலே கொடுக்கிறேன் பார்' என்றாள்.

நான் பெற்றெடுத்த, குழந்தைகளை அன்புபாராட்டுவதில் ஜாதி ஏற்றத்தாழ்வினால் ஒருபேதமும் ஏற்படாது. தங்கள் குஞ்சுகுட்டிகளுக்கு ஒரு தீங்கும் நேராது தடுக்க, மிருகங்களும், பறவைகளும் கூட, தங்கள் உயிரைத்தியாகஞ் செய்யக்கூசாதிருக்க "காக்கைக்குத் தன் குஞ்சு பொன்குஞ்சாகத் தோற்ற" அறிவுள்ள மனிதர்களுக்கு அப்படியிருப்பது ஆச்சரியமன்று அதை உணராதவர் போல் இல்லாது. கருத்தின்றி நடக்கும் சில மேதாவிகளின் நடத்தையே வியக்கத்தக்கது. தொன்றுதொட்டு ஸ்திரீகளின் நாக்கின் நீளத்தைப்பற்றிப் பேசாதவரில்லை. அதிலும் மற்றொரு விசேஷகுணம் அதற்கு யாதெனின். பெரியகடிகாரங்கள் போல், ஒருவிசை முடுக்கிவிட்டால் எட்டுநாள் வரையில் ஓயாது அடித்துக்கொண்டிருக்கும். தான் பதிலுரையாது நின்றால் இழிவென்றும், தன் மொழியே கடைசிவார்த்தையாயிருக்கவேண்டுமென்றும் வாய்போர் புரிபவர் கருதுகின்றனரென்பது, யாவரும் அறிந்ததே. இரண்டு ஸ்திரீகளுக்கும்

வார்த்தைததடித்து, யுத்தம் பலமாய் தொடங்கிற்று ஸ்திரீகள் சச்சரவுகள் ஆடவரையு மெளிதில் தொட ருமாதலாலும் இஃது நெடுநாளாய் நெஞ்சில்புகைந்து கொண்டிருந்த ஜாதி வேற்றுமையை வற்புறுத் தும் இயல்புடைய விவகாரமாதலாலும், ஆண்களும் சண்டையில் கலக்கலாயினர். கடைசியில், மேன் ஜாதியாரின், ஏளனச் சொற்களை சகிக்கமுடியாத பல வாலிபர், "இந்தக்கிராதிகள் இருத்தலாலன்றோ இவ்விதசச்சரவுகள் நேருகின்றன. கடவுள் சன்னதி சகலரும் ஒன்றே" என்று சொல்லி, சிலர் கிராதி யைத்தாண்டிக்குதித்தும் சிலர்அதை முறித்தெறியவு முயன்றனர். பெருங்குழப்பமுண்டாயிற்று.

அந்தக்குழப்பத்தின்நடுவே அங்கு அருகிலிருந்த பட்டையக்காரர் மனைவி மூர்ச்சையானாள்.

கூக்குரல்கேட்க, பாதிரிமார்கள் உடனே, அங்கு வந்து கலகத்தை அடக்கி அமைதியுண்டுபண்ணும் பொருட்டு, ஏழைகளைக்கண்டிக்கும் தற்கால வழக் கத்தையொட்டி, ஸிபாஸ்டின் முதலிய வாலிபர்களைக் கோயிலுக்கு வெளியே அனுப்பினர். பெருங்கலகம் விளையும்போலிருந்தது. நல்ல வேளையாய் வாய்ச்சண் டையோடு நின்றது. பின்னர் மூர்ச்சையாய்க் கிடந்த, பட்டையக்காரர் மனைவி 'புஷ்பமரி' அம்மா ளுக்கு ஏற்ற சிகிச்சை செய்ய அவள் கண்விழிக்கும் போதே "சிவந்த சிலுவையே அடையாளம்! அவன் எங்கே!" என்று கதறித்திகைத்தாள்.

இவ்வளவு கலகமும் நேருகிறது.'' என்றார் தனிஸ்லாஸ் பிள்ளை என்பவர்.

புஷ்பமரி மூர்ச்சை தெளிந்தெழுந்தாளென்றறிந்த, ஜனங்கள், அக்கவலை மனதை விட்டகல, அதன் மேல் உடனே கலகத்தைப்பற்றிப்பேச ஆரம்பித்தனர், "தனிஸ்லாஸ் பிள்ளை சொல்லுவது சரியே! அவனால் தான் இவ்வளவு கலகமும் விளைகிறது' ஆதிமுதல் அவனே வாயதிறவாதிருந்த, இந்தப்பள்ளர். பறையரைக்கிளப்பிவிட்டுக்கொண்டிருக்கிறான் '. என்றார் மற்றொருவர்.

" அத்தோடு நிற்கவில்லையே அவன்! இப்போது கொஞ்சநாளாய் அவன், இந்த காந்தி கட்சிக்காரரோடு சேர்ந்துகொண்டும், கூத்தாடவல்லவா ஆரம்பித்துவிட்டான்' என்றார் தனிஸ்லாஸ்பிள்ளை. 'ஆ! அப்படியா!' என்றார், அங்கிருந்த ஐரோப்பிய உடைதரித்த பாதிரி ஒருவர். உடனே அவர்பக்கம் திரும்பி, தனிஸ்லாஸ்பிள்ளை 'அதுதெரியாதா உங்களுக்கு காந்தியின் கைராட்டின ஸ்தாபன முயற்சியை இந்நாட்டிலிருக்கும் ஏழைகளின் வறுமையையொழிப்பதற்கேற்ற முறையாம்! தாழ்ந்த ஜாதியார் படுந்துயரத்தை நன்குணர்ந்தவரும், அவர்களை மற்ற ஜாதிகளின் கொடுமைகளை கடக்கச்செய்யவல்லவரும அந்த காந்தியேதானும்! அவனோடு பேசினாலல்லவா தெரியும் அவன்தலைக்கு இவ்வளவு பித்தம் ஏறியிருக்கென்பது' என்றார்.

அவன் சுயஆட்சிக்காரர்களுக்கு விரோதமா யிருப்பதா யல்லவா எண்ணினேன்'

'அந்தக்காலம் மலையேறிவிட்டது. இந்தக்கோயிலிலே நடந்த தகராறுகளுக்குப் பின், கொஞ்சநாட்களுக்குள் அவன் புத்தி மாறிவிட்டது. அப்போதே ஒருமுறை பேச்சுவந்தபோது, பிராமணர்கள் அக்கிரமங்கள் செய்கிறார்களென்று தூற்றிக்கொண்டிருந்தோமே! அது தவறு அக்கிரமம் எல்லோரும் தான் செய்கிறார்கள்' என்றும் 'பார்க்கப்போனால் நம்முடைய சொந்த நாட்டிலும் பிறர் நாடுகளிலும் வெள்ளையர், தோல்நிறம் கறுத்தவர்களிடம் புரியும், கொடுமைகளும், எள்ளளவும் பிராமணர்கள் செய்யும் கொடுமைகளைக் காட்டிலும் பன்மடங் கதிகமான தெனவே புலப்படும்! தோல் நிறத்தால் ஏற்படும் வேற்றுமைகளை, துறவிகளாயிருக்கும் நம் பாதிரிமார்களும் கடக்க வில்லையாம். இன்றும் நாளையும் நம்மை ரட்சிக்கும் பொருட்டு அவதரித்த கர்த்தரும் (அவரும் நமது ஆசியாக்கண்டத்தில் பிறந்தவரானதால்) சில குடியேற்ற நாடுகளுக்குள் காலடி வைக்ககூடாதெனத் தடுத்ததும், சில நாடுகளில் அவரையும் சீர்படாக் குற்றவாளிகளுக்கு விதித்திருக்கும், மானக்கேடான நிபந்தனைகளுக் குள்ளாகும்படியும், செய்யவல்ல சட்டங்களிருக்கின்றனவாம். அதை ஏன் கேட்கிறீர்கள். விஷயம் முற்றிப்போய்விட்டது' என்றார்.

‘காந்தியின் சூழ்ச்சி நம்முடைய ஜனங்களுக் குள்ளுமா பரவ ஆரம்பித்து விட்டது’ என்றார் ஐரோப்பிய வேடந்தரித்த பாதிரியார். ‘அதை ஏன் கேட்கிறீர்கள். நேற்று என்னிடமிருந்து கூட, ஏதோ திலகர் ஸ்வராஜ்ஜிய நிதியாம். அதற்காக ஐந்து ரூபாய் வாங்கிக்கொண்டு போனதோடு, கிறிஸ்தவர்கள், நாம் தேசபக்திகிளர்ச்சியில் போதுமான ஊக்கங்காட்ட வில்லை, என்று சொன்னவர்களோடு ஒத்துகிறான். அவனை ஏன் புஷ்பமரியம்மாள் பார்க்கவேண்டுமென் கிறாளோ தெரியவில்லை!’ என்றார் தனிஸ்லாஸ் பிள்ளை. ‘அந்த துஷ்டனிடம் உனக்கு என்ன இருக்கிறது’ என்று பாதிரியார் கேட்க ‘துஷ்டனோ நல்லவனோ அவனை நான் பார்க்கவேண்டும், என்று விஷயத்தை வெளியிடாது கூறியபடியால் கோபமுண்டு, பாதிரியார் ‘அவனைக்காணவேண்டுமானால் அவன் வீட்டிற்குத்தான் போகவேண்டும். அவனை இனி இங்கு காணவியலாது’ என்றார். வீடு சென்றதும் தன் கணவன் அனுமதியைப் பெற்று, ஸிபாஸ்டியனைக் காணச்சென்றாள்.

புஷ்பமரியம்மாளின் செயலின் காரணந் தெரி வதற்கு, நாம் சுமார் பதினான்கு வருஷங்களுக்குமுன் நடந்த ஒருசம்பவத்தைத் தெரிந்துகொள்ளவேண்டும் திருச்சி நகருக்கருகில் உள்ள ஒரு கிராமத்தில் வரு ஷந்தோறும், ஒரு கிறிஸ்தவர் திருவிழா நடந்து வரு வது வழக்கம். அந்தத்திருவிழாவிற்கு ஆயிரக்கணக் கான ஜனங்கள் வருவதுண்டு. அதற்குப் பட்டையக்

ஞங்கு வருஷத்திற்கு முன் நடந்த திருவிழாவிற்கு, அருகிலுள்ள கிராமத்தில் வசித்துவந்த ஒரு பள்ள ஸ்திரீயும் போயிருந்தாள். அவள் விதவையாயும், கண்களில் முழுப்பார்வையற்றவளாயுமிருந்தாள். பக்கத்து வீட்டுப்பிள்ளை ஒன்றை யழைத்துச் சென்றிருந்தாள். கூட்டத்தில் அந்தப்பையன் பிரிந்து போய் பிறகு தன் ஊரார் சிலருடன் தன் வீடு போய்ச்சேர்ந்தான். அவளோ அருகே தனியே நின்ற ஸிபாஸ்டியனை தன்னுடன் வந்த பையனென்று கருதி அவன் கையைப்பற்றிக் கொண்டாள். வேடிக்கைகள் பார்த்துக் கொண்டேபோன அறியாப்பிள்ளை, ஸிபாஸ்டியனும், அவளோடு வெகுதூரம் சென்ற பின் தான், தன் தாய் தந்தையரைக்காணாது அழத்துடங்கினான். இன்னார் குழந்தை யென்று அறியாத அச்சிறுவனை தாய் தந்தையருடன் சேர்ப்பிக்கச் சக்தியற்ற அந்த ஸ்திரீ தானே குழந்தையை வளர்த்து வந்தாள். சிறிய குக்கிராமத்தில் பள்ளர் சேரிக்கு, பட்டையக்காரர் பத்திரிகைகளிலும், விளம்பரங்களிலும், தன் குழந்தையைப்பற்றி பிரசுரித்த செய்தி எட்டவேயில்லை. ஸிபாஸ்டியன் பள்ளர்களுடனேயே வளர்ந்து, ஒரு நல்ல பாதிரியாரின் உதவியால் தொழிலையும் கற்று, கண்ணிழந்த ஸ்திரீயைத் தன் தாயெனவேபாராட்டிக் காத்து வந்தான். இளமையில் தன்னை அன்போடு தாய்போல் வளர்த்த ஸ்திரீயைக் கைவிட அவனுக்கு மனமில்லாததால், இனித்தங்கள் குழந்தையைத்தங்கள் வீட்டிலேயே வைத்துக்கொள்ளவேண்டுமென

விரும்பிய, பட்டைக்காரரும், புஷ்பமரியம்மாளும், அந்தக்கன்னிமுத்த கிழவியையும் தங்கள் மனையிலேயே வைத்துக்காக்க நேர்ந்தது. இதன் பிறகு திருச்சியில் கிறிஸ்தவர்களுக்குள்ளும் பரவி வந்த கொடிய ஜாதி வேற்றுமைகள் ஒழிந்தன வென்றும், இது வரையில் அசிரத்தையாயிருந்த கிறிஸ்தவர்கள் தேசீய விஷயங்களில் ஊக்கங்காட்டத் தொடங்கினரென்றும் இயேசு நாதரின் நற் போதனைகளைப் போதிப்பதற்காக துறவறம் பூண்டும், தோல் நிறத்தின் வேற்றுமைகள் மனதை விட்டகலா ஐரோப்பிய பாதிரிமார்கள் சிலர் மனங்கலங்கலானா ரென்றும சொல்லவும வேண்டுமா?

நம் தேசத்தாய்க்குத் தொண்டு புரிவது இத் தேசத்திற் பிறந்த ஒவ்வொரு ஜாதியாருக்கும் மதத் தாருக்கும் வாய்ந்த கடமையும், உரிமையும், என நாம் ஒவ்வொருவரும் உணர்ந்து, அதற்குத் தக்கவாறு மனங்கோணாது நடப்போமாக!



## XI. அஞ்சாத நெஞ்சம்.

ஒத்துழையாமைக் கட்சிக்காரர்கள் தண்டனைக் கஞ்சி யவர்களில்லையென்பது, அரசாங்கத்தார் பிரகரித்த சிறைச்சாலைக் கணக்குகளிலிருந்தும், சுதந்திர தாகங் கொண்டவர் தங்கள் உயிரையும் அதற்குப் பெரிதாயெண்ணவில்லை யென்பது, அக்காலி ஸீக் ஜாதியாரின் நிக்கிழையாய்ப் போரினாலும், அடக்கு முறையால் சுதந்திர எழுச்சி மடியாதென்பது இவ் வருஷம் காங்கிரஸ் கொட்டகையில் கூடிய மகா சபையின் தொகையினாலும், இவ்வுலகிலுள்ளார் அனைவருக்கும் இப்போது உள்ளங்கை நெல்லிக்கனி போல் விளங்கியிருக்கும். ஆயினும் இவ்வுண்மைகளைப் பலரும் எளிதிலறிந்து கொள்வதற்கு முன்னர் நடந்த இச்சிறு சமபவத்தை ஈங்குகூறல் மிகை ஆகாதென நினைக்கிறேன்.

திருச்சி ஜில்லாவின், காவிரிக்கரையோரத்தில் ஓடி, ஆடி, விளையாடிவிட்டு அலுத்துப்போய், தாயின் மடியில் வந்து படுக்கும் குழந்தையைப்போல், காவிரியுடன் வந்து கலக்கும் அமராவதியின் சோலையிடத்தில் கட்டளை என்றதோர் ஊர் இருக்கின்றது. 'ஊரைச்சொன்னாலும், பேரைச் சொல்லாதே' என்று பழமொழியிருப்பதால் பின் கூறிய சம்பவம் வேறு இடத்தில் வேறு பேருடையவருக்கு நேர்ந்திருப்பினும், கட்டளையில் நடந்ததாகவும் அங்கில்லாத ப்பிரபலிய முதலியாருக்கு நேர்ந்ததாகவும், எழுத

நான் துணிந்திருப்பதால் அவ்வூரிலுள்ளோர் தம்மவருள் யாரையோ குறிப்பிட்டெழுதியதாய்க் கருதக் கூடாது.

நீர்வளம் நிறைந்த அந்த ஊரில், ஆதியில், நெஞ்சில், பூதமேறி இருந்ததுவது போலுள்ள, தற்காலத்திய சாசுவத மில்லா நிலத்தீர்வைக்கு, முன்னமே தொட்டு, மிக செல்வாக்குடன் வாழ்ந்து வந்த முதலியார் குடும்பத்தில் பிறந்தவர், சுப்பிரமணிய முதலியார் செய்கையில் பெரியவராதலால், சுப்பிரமணிய முதலியாரென்றழைக்கப்பட்டவர், உண்மை வயதில் வெகு இளமைவாய்ந்த வாலிபரே— இன்னமும் அவருக்கு இருபத்திநான்காம் ஆண்டு நிரம்பவில்லை, நல்ல தனிகர் குலத்தில் பிறந்த அவர் தான் பள்ளியில் படிக்கும்போதே, தன் தந்தையை இழந்ததால், குடும்ப பாரத்தைத் தாங்கவேண்டியதாயிற்று. ஆகையினால், பள்ளியைத் துறந்து பண்ணையைப்பார்த்து வந்தார்.

தந்தை இறக்குமுன்னமே பையனுக்கு ஒரு விவாகம் செய்து வைத்திருந்தார். அரசாங்கத்தில் உப்பு, ஆப்காரி இலாக்காவில் நீண்டநாள் வேலை பார்த்து, தற்போது, உதவிச்சம்பளம் பெற்று, தன் பூர்விக ஊருக்குவந்து, அங்கு தன் நிலபலங்களைப் பார்த்துக்கொண்டு வாழும் சந்திரசேகர முதலியாருக்கு, இரண்டு பெண்களிருந்தனர். அதில் மூத்தவளை சுப்பிரமணியனுக்கு மணம் முடித்தார்கள். ஆனால் கலியாணமானதின் பிறகு, அந்தப்பெண் கொடிய

நோயில் சிக்கி வருந்தியதால், அந்த விவாகத்தினால் சுப்பிரமணியனுடைய தாய் தந்தையருக்கு மனங் குளிரவில்லை. ஆயினும் பெண்ணின் நற்குணங்களையும், நல்ல நடத்தையையுங் கண்ட அவர்கள் அதைப்பற்றி வெளிப்படையாய் அதிகமாய்ப் பேசாவிடினும், தன் மாமனார் முதலியோரின் மனக்குறையையுணர்ந்த அப் பெண்மணி, தன் கணவனுக்கு வேறு ஒரு மனைவியையும் விவாகம் செய்துவிக்கும்படியும், தன் தங்கை ருக்மணியையே கொடுக்கும்படி தன் பெற்றோரிடம் சொல்லியும் வருவதானாள். வீட்டில் விளையாட்டாய் பேசுவதுபோல் அடிக்கடி ருக்மணியை சுப்பிரமணியனுக்கே கொடுக்கவேண்டு மெனும் பேச்சு தாராளமாய் உலாவி வந்தது. தனது அக்காள் புருஷன் மீது அத்தியந்த பிரியம் வைத்து, அவருடன் நட்பு பாராட்டுவதில் அதிக ஆனந்தங் கொண்ட சிறுமி ருக்குமணி, சிறு பெண்ணாயிருந்த போதிலும், இது மாதிரி விளையாட்டாய் பேசும் பேச்சுக்கள், உண்மையாய் நம் சமூகவாழ்க்கையில், நிகழுவதைக் கண்டறிந்தவளாதலால், அப்படியே நடந்தேறக்கூடு மென்றெண்ணி தன் மனதிற் குள்ளேயே நினைத்து, அங்ஙனம்நேரிடின், அதுதான் செய்த பாக்கியமே யென்றெண்ணி வந்தாள். ருக்குமணியின் தாயும் தன் மக்களிருவரையும், ஒரு புருஷனுக்கே மணமுடிப்பதற்கிசைந்தவாறே அபிப்பிராயப்பட்டு வந்தாள். அப்படி அந்த அம்மாள் நினைத்ததற்கு, சுப்பிரமணியனுடைய, நற்குண நற்

செய்கைகள் பட்டுமே காரணமன்று. மற்றொரு கார ணமுமிருந்தது. அது யாதெனில், சந்திரசேகர முதலியார் தங்கைமகன் நடேச முதலியாரென்றொரு வாலிபனிருந்தான். சில இனத்தாரில், மாமன் மகளை மருமகனுக்குக்கொடுக்க மறுக்கக்கூடாதெனும் வழக்கம், நம்மவருக்குள், அநேகருக்குள், ஒரு விதியாக ஏற்பட்டுவிட்டது. நடை, உடை, பழக்கங் கள், ஒழுங்கின்றி, கெட்ட தோழர்களுடன் சேர்ந்து, நேர்மைதப்பிய துறைகளினிறங்கி, சிறுபிராயத் திலேயே 'விளையும் பயிர் முளையிலேயே' எனக் காட்டி, அதனால் தன்பூர்வீக சொத்தையும் கொஞ்சம் விரயம் செய்தவனாக, நடேச முதலியாரைப்பற்றி ஊரார் பேசிக்கொள்வதால், அவனுக்குத் தன் பெண் ருக்மணியைக் கொடுக்கக்கூடாதென அஞ்சினாள்.

நம்மவருள் பரவியிருக்கும், பல வழக்கங்களி லின்றும் மீண்டேறுவதற்கு, நம்மவர் பலருக்கு தைரியம் வருகிறதில்லை. இதனாலேயே நம்மவருள், அநேகதீங்குகள் விளைவதாயிருக்கிறது. அநேக துர்ப்பாக்கிய விவாகங்கள் வருஷாவருஷம் நடை பெறுகின்றன. பழக்கங்களின் கொடுமையை மறந் திறனற்றவர், விதிவசம் என்று ஊழ்வினையைத் தூறு சொல்லிக்கொண்டு, துன்புறுங்காலங்களில் தங்களைத் தேற்றிக்கொள்வதை நாமொவ்வொருவரும் கண்டிருக் கிறோம்! முதல்பெண்ணையே தன் மகனுக்கு விவாகம் முடிக்கதாதற்பாக, சந்திரசேகர முதலியாரின் தங்கை மனவருத்தங் கொண்டிருந்தாள். இப்போது

இரண்டாவது பெண்ணையாவது, தன்மகனுக்குக் கொடாவிடில் தான் தமயன் குடும்பத்தோடு ஒரு சம்பந்தமும் வைத்துக்கொள்வதில்லையென்றும் 'நல்லது பொல்லாதது' ஒன்றுக்கும் வருவதில்லையென்றும் பயமுறுத்திவந்தாள். 'இரண்டு பெண்ணையும் ஒருவனுக்கே கொடுக்கவாவது! என்ன உலகத்தில் இளைஞரில்லாது வரட்சியுண்டாய்விட்டதா? அல்லது சுப்பிரமணியன் தேவருலகத்திலிருந்து நேரே குதித்தவனா? அவனைவிட்டால் வேறுகதியில்லையென்று நாமிருக்க!' என்று தன் தமயனிடம் முறையிட்டாள்.

நடேசமுதலியின் நடவடிக்கைகளை நன்குணர்ந்திருந்தும் கைம்பெண்ணாகிய தன் தங்கைக்கு ஓரே ஆதாரமாயுள்ள, மகனை சீர்திருத்தும் இச்சை கொண்ட சந்திரசேகர முதலியாருக்கு தன் தங்கை சொல்லைக்கடப்பதரிதாயிருந்தது. மேலும் ஒரு புருஷனுக்கே இரண்டு பெண்களையுங் கொடுப்பது, இம்மையை விலைக்கு வாங்குவது போலாகுமென்றும் அவருடைய கொள்கை. தவிற முக்கிய அங்கத்தினனான சுப்பிரமணிய முதலியாருக்கே, தன் மனைவியிருக்கும் போதே வேறு பெண்ணை மணப்பதற்கும் மனமில்லை. எவ்வளவு தன்னலம் பாராட்டாது சொல்லியும், குணம்வாய்ந்த தன் மனைவிக்கும் தான், அவள் முன்னிலையில் மறுமணம் முடிக்காதிருத்தலினால், அவளுக்கு ஒரு இணையில்லா இன்பமுண்டாகும், எனும் ஸ்திரீதத்துவத்தையும் அவன் உணர்ந்தவன்.

இக்காரணங்களால் சுப்பிரமணியன் தந்தை இறந்தகாலத்தில், சந்திரசேகர முதலியாரை வேண்டியும், அவர் அந்த வேண்டுகோளை நிறைவேற்ற மனம் வராதவராய், 'பிறகு பார்த்துக்கொள்வோம், பிறகு பார்த்துக்கொள்வோம், நம் ருக்மணிக்கு வயது ஆகவில்லையே' என்று சொல்லிக்கொண்டு வந்தார். தன்றுடைய பெண் நாளுக்குநாள் இளைத்துக்கொண்டுவருவதைப்பார்த்து அவள் பேதித்து இவ்வுலகில் ரூபவதி தென்றென்னியதாய், தன் கணவனிடம், தன் மகளின் நிலைமையைத் தெரிவித்து, ருக்மணியை இப்போதே சுப்பிரமணியனுக்கு விவாகம் முடித்து வைத்தால், பெண்களிரண்டும் ஒருவருக்கொருவர் உதவியாயிருப்பரெனத் தூண்டினள். 'இருக்கட்டும் பார்த்துக்கொள்வோம்' என்றார் சந்திரசேகரமுதலியார். இதற்குள் சுப்பிரமணியமுதலியார் மனைவி கர்ப்பவதியானாள். இது செய்தி தெரிந்ததும் தமயனிடம் சென்று, சந்திரசேகரமுதலியாரின் தமக்கை, 'அண்ணே! வெகுநாளாய் இதோ, அதோ, என்று சொல்லிக்கொண்டே வருகிறீர்கள். நானும் தங்களுடன் சம்பந்தஞ் செய்யும் ஆவலினால், அநேக நல்லவரன்களை வேண்டாமென்று கழித்து வந்தேன். என் மகனுக்கோ வயதாகிவிட்டது, வீணில் அவனைக்கெட்ட வழிகளிற் புகுத்துகிறேனெனத் தூற்றுவதில் பயனில்லை. அவனுக்குத்தக்க மனைவியைத் தேடிவைக்காத குற்றம் நம்முடையதே. நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்'? என்றாள்.

'உன் மகனுக்கு வயததிகமானல், என் மகளுக்குப் போதுமான வயதாகவில்லையே. இவ்வளவு சிறு பிராயத்திலேயே என் ருக்மணிக்கு விவாகம் செய்விக்கவேண்டும். நாமும் பார்ப்பனரா? பால் மறவாக் குழந்தைகளுக்கு பொற்ருலி கட்டிப்பார்க்க'! என்ருர் சந்திரசேகர முதலியார். 'நன்ருய்ச் சொன்னீர்கள்! ருக்மணியா பால் மறக்காத குழந்தை! நாளைக்கே ஒரு குடும்ப பாரத்தைத்தாங்கும் திறமைவாய்ந்தவளாயிற்றே அவள்! அவள் வயதில் நாங்களெல்லோரும், மாமியார் வீட்டுக்குப்போய் விட்டோமே!' என்று தங்கை பதிலளிக்க, அங்குவந்த முதலியார் மனைவி 'இப்போதுதான் மாப்பிள்ளைவீட்டிலிருந்து வந்தேன் அந்தப்பெண்ணிருக்கிற நிலைமையையும், அவள் படும் பாட்டையும் பார்த்துவந்த எனக்கு ஒரு பேச்சும் மனதிற்கு உகக்கவில்லை. நோய் முற்றிப்போய் விட்டது போலிருக்கிறது! 'என்று பெருமூச்செறிந்தாள். 'ஏன் நோய், நோய், என்கிருய்? நோயானல் என்ன. அவளுக்கென்னகுறை. அல்லது அவள் புருஷனுக்கென்னகுறை. மக்கட் பேறும் சீக்கிரமுண்டாகுமெனத்தெரியவருகிறது. ஒரு குழந்தையை மடியில் வைத்து சீராட்ட ஆரம்பித்தாளானல், தானே நோயெல்லாம் பறந்து போம்! நான் சொல்வதைக் கேளுங்கள். அவளுடைய வளைகாப்புக் கலியாணத்தோடு சேர்த்து ருக்மணிக்கும் நடேசனுக்கும் விவாகம்செய்து விடுங்கள் என்ருள் 'மூத்தகுமாரி பெற்றுப் பிழைத்து நல்லபடியாயாகட்டும், பிறகு ருக்மணி

பின் விவாகத்தைக்குறித்து ஆலோசிப்போம். இப்
போது அதைப்பற்றி சிந்திப்பானேன்' என்று பெண்
களின் தாயார், அலட்சியமாய்ச் சொல்ல, உடனே
அவள் நாத்திக்குக்கோபமூண்டு 'நான் இவ்விஷயமாய்
எப்போது பேசினாலும், ஏதாவது சாக்குப் போக்குச்
சொல்லி என்னை அனுப்பிவிடுவதே உங்கள் வழக்கமா
யிருக்கிறது. சுப்பிரமணியனை விட்டால் வேறு பிள்ளை
களே இவ்வுலகிலில்லாது போல், அவனுக்கே இரண்டு
பெண்களையும் கொடுக்கவேண்டுமென்றும் எண்ணத்
தால், மூத்தமகள் இறக்குங் காலத்தை எதிர்பார்த்து
நிற்கிறீர்கள்போலும்! நல்லவிக்கை 'பிள்ளை இறந்தா
லும் சரி, மாட்டுப்பெண் கொட்டமடங்கவேண்டும்'
என்றிருந்ததுபோலல்லவா இருக்கிறது! ஒரு சாவை
எதிர்பார்த்து நிற்கும் கலியாணம், என்ன இழவு
கலியாணமோ!' என்று ஆத்திரந்தாங்காது பேசத்
தொடங்கினாள்.

பலக்கூச்சமதிகமாயுள்ள தாயின் காதில் இச்
சொற்கள் விழவே, அவள் மெய்பதைத்து 'அம்
மணி! போதும்; நிறுத்துங்கள். இப்படியெல்லாம்
கொடூரமான சொற்களைச் சொல்லாதீர்கள். என்
மூத்தமகள் இறக்கவும் வேண்டாம். இளையவள்
கலியாணமும் இழவுகலியாணமாகவேண்டாம். வேண்
டுமானால் நாளைக்கே உங்கள் மகனுக்கு ருக்மணியை
மணமுடித்துக்கொள்ளுங்கள். அதற்காக ஒரு பாவமு
மறியாத என் அருமைக் குழந்தைகளைச் சபிக்கா
திருங்கள்' என்றுபதிலுரைத்து, கண்களைப்பிசைந்து

கொண்டு அவ்விடம் விட்டகன்றாள். இந்த விவகாரத்தின் கடைசி முடிவென்னவெனில், தனக்குமனமே இல்லாதிருந்தும், தங்கள் இனத்தாரின் வழக்கப்படி, தன் மகளைத் தன் தங்கை மகன் நடேசமுதலிக்கு, சந்திரசேகர முதலியார் விவாகஞ் செய்துவித்து, தன் தங்கையின கோரிக்கையை நிறைவேற்றி, அவன் மனதை திருப்தி செய்துவிக்கநேர்ந்தது இனியாகினும். நடேசமுதலியார், தனது தீய சகவாசங்களை ஒழித்து, ஒழுங்கான வாழ்க்கையிலீடுபடுவாளென தெய்வத்தை பிரார்த்தித்துக்கொண்டு பெற்றோர் காலங் கழித்தனர்.

சுப்பிரமணிய முதலியாரின் மனைவியின் நோய், பிரசவித்தவுடன் திடீரென அதிகப்படும் சுபாவமுள்ள, காசரோகத்தைச் சேர்ந்ததால், அதிகரித்து, பிரசவித்த இரண்டு மாதங்களுக்குள், அவளை விண்ணுலகத்துக்கு கொண்டு போயிற்று. கர்ப்பத்திலும் பிறந்தவுடனும் தகுந்த ஆதாவில்லாத அச்சிசுவும், இவ்வுலகிலுதித்த கொஞ்சநாட்களுக்குள், வந்த விடத்தை நோக்கி, அங்காவது சென்று தாயின் உதவியைப் பூரணமாய்ப் பெறலாமென்று சென்றது. இந்த சம்பவங்களால் சுப்பிரமணிய முதலியார் தன் வேட்டகத்தினரோடு உள்ள சம்பந்தங்கள் அற்றுப்போனதெனக் கருதாதபோதிலும், நாளடைவில், தன் மாமனார், மாமியாருடன் அதிக உறவாடுதலில்லாமலிருக்கும்படி நேர்ந்தது. இதற்கு முக்கிய காரணம், மடங்கை ருக்மணியே! ஆதிமுதலில் அத்தி

பக்தவிசுவாசத்துடன் பழகிவந்த அச்சிறுமியின் கதி
பரிதபிக்கத்தக்கதாயிருந்தது. கல்யாணமான பின்
னும் நடைமுறையில் திருந்தவில்லை. மென்மேலும் தீய
வழிகளில் இறங்கி, தன் சொத்துக்களை விரயம் செய்த
தோடில்லாமல், கடையில் இருக்க இடமுமின்றி, தன்
மாமன் வீட்டிலேயே வந்து தங்கும்படி அவன் கதி
யாயிற்று. அங்கும் ஒருமாலைப்பொழுதாவது, அவன்
சுயபுத்தியுடனிருப்பதைப் பார்ப்பதரிதாயிருந்தது.
மதுபானமிகுதியால், தன் தேக சௌக்கியத்தையும்
நற்குணங்களையுமிழந்ததோடு, போதைகளின் சூழ்ச்சி
யிலகப்பட்டவருக்கிருக்கும் சுபாவமாகிய, பிறர்படுந்
துயரத்தை அறியக்கூடாத மந்த உணர்ச்சியும்
அவனுக்கு வந்தது. தன்னால் உபகாரமும் இன்பமும்
அளிக்கத்திறனில்லாவிடினும், இம்மையும் துன்பமு
மாவது அளிக்காமலாவது இருப்போமென்று கூட
அவனுக்குத் தோன்றவில்லை. குடியிலேறுகைக்குட்பட்
டோரிடம் குடிகொண்டிருக்கும் 'அழுக்காறு' எனும்
பேயும் அவனுக்குப் பிடித்தது. அன்புடன் அருகில்
அணுகும் அலங்கைகிட்ட அண்டொறுதவண்ணம்
தக்கும், கள் நாற்றமெனும் வெளியைத்தான் அளிந்
திருப்பதை உணராது, தன் பத்னி தன்னை அரு
வெறுப்புடனும், சுப்பிரமணியனைப் பட்சமுடனும்
நோக்குவதாய்ச் சந்தேகித்து, அவனை வருத்தவுந்
தொடங்கினான். தான் இளம்பிராயத்தில் கொண்ட,
அவா எவ்வாறிருப்பினும், உண்மையான இந்தப்
பெண் சிகாமணிகளைப்போலவே, தனக்கு விதிவசத்
தால் கிடைத்த கொழுநனை, தெய்வமெனக்கருதி

அவரால் தனக்குதித்த எவ்விதத் துன்பத்தையும் தாயிடமும் வெளியிடாது, முகமும் சுளியாது சகித்து, தன் கணவனிடும் துன்பங்களுக்காக தன் தலையெழுத்தையே நொந்து, பொறுமையுடன் தன் பொறியைச் செய்துவரும், சிறுமி ருக்மணிக்குத்தன்னால் துன்ப மதிகரிக்கக்கூடாதெனவே, சுப்பிரமணிய முதலியார் அவர்கள் வீட்டிற்குப்போவதையும் ஒழித்து தான் தனியே நின்றுவிட்டாள்.

தேசமெங்கும் உதித்த கிளர்ச்சிகளைக்கவனித்து வந்த, சுப்பிரமணிய முதலியார் தன் இனத்தார் முன்னேற்றத்தைக்குறித்துக் கிளம்பியதாக பிரசுரிக்கப் பெற்ற "நியாயக்கட்சி" எனும் சார்பாருடன் சேர்ந்து ஜாதீய இயக்கத்தில் முதலில் ஈடுபட்ட போதினும், நாளடைவில், அந்தக்கட்சித்தலைவர்களும், குடியாலும், வரியாலும், வறுமையாலும் வருந்துங் கோடானுகோடி ஜனங்களின் நிலைமையைச் சீர்படுத்த கொஞ்சமேனும் முயற்சி செய்யாது, தங்கள் தங்கள் சுயமேன்மையைக்கருதியே காரியம் நடத்துவதைக் கண்டு, அக்கட்சியைவிட்டு மனம் வெறுத்துவிலகினார். பின்னர், புண்ணிய புருஷன் மகாத்மா காந்தி தூமகேதுவைப்போல் இந்திய தேசீய ஊக்கவிண்ணில் தோன்றி வா[illegible]ற ஜீவன்களைப்போன்று வருந்தும் கோடானுகோ[illegible]க்கட்கு அருள் வழிகாட்டும் ஒளியை வீச ஆரம்பித்தபோது, தன் தங்கைபோன்றிருக்கும், மங்கை ருக்மணி படுந்துயரமே, அவர் கண்முன் நின்று தானும் தன்னாலியன்ற தேசத்தொண்டு புரியும்

படி, அவரைத்தூண்டிற்று. கட்டளையில் மதுவிலக்கு முயற்சி தீவிரமாய் நடந்தது. இந்த முயற்சிக்கு அதிகாரணமாயிருந்தது சுப்பிரமணிய முதலியாரே. அரை வயிற்றுக் கஞ்சியுமில்லாது, வீடுவாசல், நிலபுலம் யாதுமில்லாது உடுக்கப்போதுமான உடையுமில்லாது தவிக்கும் ஏழைகளிடமிருந்து பிழிந்தெடுத்து, ஐயாயிரம், ஆறாயிரம் சம்பளங்களாகக் கொடுத்து, நாட்டிலெங்குமே திரவிய லெக்ஷிமி குடியிருக்கவொட்டாதெனும் விரதங்கொண்ட ஆசுரி முறை அதிகாரம் பெற்ற பணம் பிடுங்கிப்பூச்சிகள், தங்கள் வரும்படிக்குறைவால் கவலையுற்று அதற்குக் காரணமாயுள்ளோரை, அடக்குமுறைச் சாட்டையாலடிக்கத் தொடங்கினர். சிங்கம் தின்றெஞ்சிய துண்டுகளை விழுங்குவதற்காக அதன் பின்னே, பசுவேட்டைக்கேகும் நரியினம்போன்ற நம் நாட்டு அதிகாரவர்க்கத்தினரும், போதைக்கடைக்குத்தகைக்காரரும், அதற்கு உடந்தையாயிருந்தனர். சுப்பிரமணிய முதலியாரை அடக்கினாலொழிய, தன்னால் குத்தகைப்பணஞ் செலுத்தமுடியாதெனக் கூறிய, கள்ளுக்கடைக்காரப் பிரபுவின் தர்மசிந்தனைக்கிணங்கி, அதிகாரிகளும் அவரைக் கைது செய்ய எத்தனித்தனர். 'வாரண்டும்' பிறந்து விட்டது. அதற்குள் கட்டளையில் ஒரு விசேட சம்பவம் நேர்ந்துவிட்டது.

சுப்பிரமணிய முதலியாரும், அவரைப்போன்ற மற்ற விஷயந்தெரிந்த சிலரும் கரூரில் ஒரு உபந்நியாசத்துக்குச் சென்றார்கள். அன்றும், கள்ளுக்கடையண்டையில், சில தான்தோன்றி இச்சாசேவகர்களால் மறியல்வேலை நடந்தது. மகாத்மா காந்தியின்

சாத்விக மூர்த்தி நன்குணராக இவர்கள், குடிவெறி கொண்டு, தங்களை நல்வார்த்தைகளால் தடுக்கும் வாலிபர்களுக்கும் இணங்காது கடைக்குட்புக, அச் சிறுவர்கள் அவர்களைக் கண்டுப் பரிஹாசித்தார்கள். அதிலிருந்து வார்த்தை தடிக்கத் துடங்கிற்று. வெகுநாளாய் மனதில் ஆத்திரப்பட்டுக்கொண்டிருந்த நடேச முதலியார், அன்று அங்கு வந்து, அச்சிறுவர் களை வாயில் வந்தபடி ஒருபாவமுமறியாத அவர்கள் பெண் உறவினரையுந் தூஷித்து, திட்டிவிட்டு, 'இதோ நான் பஹிரங்கமாய் குடிக்கப்போகிறேன்' என்று வீரியம்பேசிக் கடைக்குள் நுழைந்தார். ஆனால் அவர் வெகுநாளாய்க் கடைக்குப் பாக்கி தொகை கொடுக்கவேண்டியிருந்ததால், கடைக்காரர் இவரு டைய உதவிக்குக் தகுந்த நன்றி பாராட்டவில்லை. கடையில் மத்தியஸ்தத்திற்கு வந்த குரங்கைக் கண்ட பூனைகள் பார்த்ததுபோல் அவரைக் கண்டஞ்சினார். உள்ளே நுழைந்த நடேச முதலியாரும் தான் வழக்கமாய் அருந்தும் அளவோடு நில்லாமல் அதிக மாய் கேட்க, பொருள் நஷ்டத்தாலும், வியாபாரக் குறைவாலும் நொந்த கடைக்காரர், 'என்னையா' நல்ல சமயம் பார்த்துக் கடனுக்கு வாங்கிக் குடிக் கலாமென்று வந்தீர்! ஏற்கனவே நான் அழுதுகொண் டிருக்க நீரும் வந்துசேர்ந்தீரா! இருதலைக் கொள்ளி போலாயிற்று. நீங்கள் தயவுசெய்து இத்துடன் போய்வாரும். உங்களுடைய பழைய பாக்கிகளைத் தீர்க்காமல் இனி இங்கிருந்து ஒரு டிராமும் சரக்கு எதிர்பார்க்கவேண்டாம்' எனக்கடிந்து சொன்னார்.

சொல்லிவிடுவாரோ எனப்பயந்தார். தன் மனைவியை அழைத்து, 'நீ உன் அக்காள் புருஷனிடஞ் சென்று என்னைக் காட்டிக்கொடுக்காதிருக்கச் செய்ய வேண்டும்' என வேண்டினார். 'நாணென்னு நல்லாள் புறங்கொடுக்குங்கள் ளென்னும் பேணுப்பெருங்குற்றத் தார்க்கு' எனும் குறள் ருக்மணி மனதிற்கு ஞாபகம் வர, அதை வெளியிடாது, 'உங்கள் குற்றசதிற்காக அவர் பழியையும் தண்டனையும் சுமக்கவேண்டுமென கிறீர்களே! அவரிடமிருந்து இந்த பெருதவியைப் பெருவதற்கு, நீங்கள் அவருக்குஎன்ன நன்மை செய்திருக்கிறீர்கள்? அவர் இந்தவீட்டிற்கு வாராதபடியும், என்னுடன் பேசாதபடியும் நீங்களே, வீண்சந்தேகங் கொண்டு தடுத்தீர்கள். இப்போது நான் எவ்விதம் அவரிடஞ்சென்று வேண்டிக்கொள்ளுகிறது?' என்று பதிலளித்தாள். முகத்தில் மடமை விளங்க, பல்லைக் காட்டி நடேசமுதலியார், 'தண்டனைகளைச் சந்தோஷத்தோடு ஏற்றுக்கொள்வதெனும் தீர்மானத்துடனே தானே, அவர் இந்த கைங்கரியத்திலிறங்கி இருக்கிறார். மேலும் ஸர்க்கார் அவரை எப்படியும் தண்டிப்பது நிச்சயம். ஆனால் என்விஷயம் அப்படி அல்ல' என்றார்.

'நான் போய் கேட்டுக்கொள்ளாவிடினும், அவர் உங்களைக் காட்டிக்கொடுக்கமாட்டார் அவர் இயல்பை நான் நன்கறிந்துள்ளேன்' என்று அவள் சொல்லியும், 'எதற்கும் நீயும்போய் ஒரு வார்த்தை போட்டுவைக்க வேண்டும்' என்று நடேச முதலியார் கெஞ்சினார்.

வெகுநாளாய்த் தன்னுடன் வார்த்தையாடாத ருக்மணி தன் தந்தையோடு தன்னைச் சிறைச்சாலையில் வந்து பார்க்க, சுப்பிரமணிய முதலியாருக்கு முகம் மலர்ந்தது. கடைசியில், தன் கணவன் தன் மூலமாய் அனுப்பிய வேண்டுகோளை, ருக்மணி தெரிவிக்க, 'அவர்தான் கேட்கச்சொன்னாரென்று நீயுங் கேட்கத் துணிந்தாயே! எங்கள் கொள்கைப்பிரகாரம் நாங்கள் (மகாத்மாவைப் பின்பற்றுபவர்) ஒரு விதமான எதிர்கட்சியுமாடுவதில்லையென்பதை அறியாய் போலும். மேலும் என்னுடன் சிறுபிராயமுதல் பழகிய உனக்கு, நான் ஒருபோதும் யாரையுங் காட்டிக் கொடுக்கும் சுபாவமுள்ளவனல்லனென்ன, தெரியாமல் போயிற்று' என்று வருந்தினார்.

அதுகண்டு, வெட்கித்த ருக்மணி 'எனக்கு அது தெரியாததல்ல. ஆயினும் இது மூலமாயாவது எனக்கு க்ஷேமம் பிறக்காதாவென்று நினைத்தேன்' என்றாள்.

அவள் கருத்தைத்தெரிந்துகொண்டபின், சுப்பிரமணிய முதலியாரும், 'சரி, அவரை நான் வரச்சொன்னதாகச்சொல்' என்று கூறி, அவர்களுக்கு விடை கொடுத்தனுப்பினார். பிறகு நடேச முதலியாரை வரவழைத்து 'இனி குடியையே வெறுத்து, மதுபானத்தை அறவே ஒழிப்பதாக வாக்குறுதிசெய்தால், நீவைத்த குற்றத்தை நான் வெளிப்படுத்தாதிருக்கிறேன். இதுவே நீங்கள் எனக்குச் செய்யும் பதில்

உபகாரமாகும்' என்று அவரிடம் ஒப்பந்தம் பேசிக் கொண்டு, அவரையும் நல் வழிக்குக் கொண்டுவந்தார். விசாரணைக்காலத்தில், கடையைக் கொளுத்தினது யாரென்றும், சுப்பிரமணிய முதலியார் அன்று அங் கிருந்தால் அத்தீச்செயல் நடந்தே இராதென்றும், கடைக்காரருக்கும், போலீஸ் உத்யோகஸ்தருக்கும் நன்ருய் தெரிந்திருப்பினும், அவர் கையாலேயே நட வாவிடினும், அவருடைய தூண்டுதலின் பேரிலேயே அது நடந்ததாக சாட்சி சொன்னார்கள். ஒருவிதக் குறுக்குவிசாரணை செய்யாமலும், ஒருவிதத்தற்காப்பு கட்சியாடாமலும், புன்முறுவல் பூத்த முகத்துட னேயே சுப்பிரமணிய முதலியாரும், மதுவிலக்கு பிரசாரம் என்னும் துர்க்காரியம் போன்றதைச் செய் யாதிருப்பேனென நன்னடக்கை ஜாமீன் கொடுக்க மனம் வராதவராய், ஒருவருஷகாலம் சிறைவாச மேற்றுக்கொள்வதாக இசைந்தார்.

போதைமாயையில் சிக்கித் தானும்வருந்தி, தன் அடுத்தாரையும் வருத்தும் நண்பர்காள்! இனியாவது கண்விழித்துப் பாருங்கள்! ஒவ்வொரு ஊரிலிருந்து சுப்பிரமணிய முதலியார்போன்ற எவ்வளவு பேர் பொய்ச்சாட்சிக் கஞ்சாத வஞ்சகர்களாலும், பணப் பேய்கொண்ட அதிகார வர்க்கத்தினரின் கொடுமைக் குடந்தையா யிருப்பவராலும் குற்றஞ் சாற்றப்பட்டு, உங்கள் பெண்டு பிள்ளைகளின் வயிற்றில் விழுங்கஞ்சி, போதையாய் உங்களை மயக்காவண்ணம் தடுப்பதற்

காக, தங்கள் பெண்டு பிள்ளைகளின் வருத்தத்தையும் பாராட்டாது, சிறைச்சாலைகளில் கிடந்து வருந்து கின்றனர்! அதைக்கண்டாவது நீங்கள் உங்களுக்கே கேடு பயக்கும் தீய பழக்கத்தை ஒழிக்கக்கூடாதா! தேச முன்னேற்றத்திற்காக, அன்று அணைகட்டிய இராமபிரானுக்குதவ அணிலும் வந்ததுபோல், நீங் களும் முன்வந்து வேறு உதவி புரியாவிடினும், இத் தீய வழக்கத்தை ஒழித்து, உங்கள் சொந்த பெண்டு பிள்ளைகளை ஆதரிக்கும் கடமையும் நொந்த நம் தாய் நாட்டின்மேல் விழாதபடி தடுக்கக்கூடாதா !.

“ கையறியாமையுடைத்தே பொருள்கொடுத்து
மெய்யறியாமை கொளல்.”



Printed at the Saraswathi Printing Works, Trichy.

